# " EDUCATION, IN FACT, IS AS IMPORTANT AS WAR SERVICE."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR." " TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம தத்ஸத்.*] [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜேயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **23.**] ராக்ஷஸ௵ மாசி௴, **1916**௵ பிப்ரவரி௴ [சஞ்சிகை **11.**

## " EDUCATION, IN FACT, IS AS IMPORTANT AS WAR SERVICE."

**"Education, as Important as War Service."**

"THE EDUCATIONAL NEEDS OF THE HOUR."

---

It is well-known to all that this is a time "when education is being starved everywhere in British India on the ground that the war calls for economy in expenditure."

This is applying the shears at the wrong end as will be seen from the following observations "on the educational needs of the hour" which we take from the English papers. Lieut. General Sir Robert Baden-Powel says: "Retrenchment in education would be disastrous. Ultimate victory in this war will not be merely territorial but will rest with the nation that is able within a single gen ration, to rise from its exhaustion. To secure this, education on the most up-to-date lines is necessary, and development rather than retrenchment should be the rule. Education, in fact, is as important as war service."

"In the present crisis and in the immediate future, more education will be needed, not less, and that the available funds must by all means be augmented."—*The Executive of the National Education Association.* (England.)

LORD SELBOURNE, speaking on behalf of the Minister of Education . . . fully recognises the duty of stimulating the teaching of the duties of citizenship to school children. Sir Robert Baden-Powell would take the process back a stage further and begin with the basis of citizenship—CHARACTER. When the Spirit of duty, honour and self-sacrifice has been deve-

loped in the youth of the nation,—not by external teaching, but by wise and active training from tender years—the duties of citizenship will follow of themselves.

Professor Holmes, late Chief Inspector of Elementary Schools, writing in the *Nineteenth Century and After* on German Educational Ideals, points out the dire effect of that country's mechanical autocratic methods. Life is externalised, he says, and WILL "the mainspring of Life" is weakened.

"'Great men do not lose their Child-Heart,' and one of the lasting things which the Viceroyalty of His Excellency Lord Hardinge has done to renew and rejuvenate the drooping Spirit of India and uplift it to the glory of its ancient Ideals, is the foundation of the "Children's Day" in India, which has done (more than anything else could have done in so short a period), a great deal to awaken the **Child-Heart** and through it the child-mind to the duties and responsibilities resting on it as a civic factor in the uplift of Humanity to a higher and greater level of Earthly Life—"the Life Imperial"—from which alone it can realise the glorious destiny awaiting it in the near or distant future, according as the pace and the direction it takes to move along the Eternal Road of Evolutionary Growth, is quick and straight, or halting and crooked or round-about. Revolutions of ages cannot recover a lost truth which the child-mind fails to grasp at the proper stage in its evolutionary growth."—Extract from a Dedicatory Epistle to the Minister of Education.

## The Viveka Chintamani.

The January Number of this Journal is as usual interesting. For Home Education of Children and women, this Journal is a necessity. The Tamil used in this Journal is very chaste and simple and the articles are instructive to those they are intended.—*The South Indian Mail, dated 24th January* 1916.

## THE VIVEKACHINTAMANI.

The January issue of this excellently conducted Tamil monthly is tackling with the serious problems of Child Education and begins with an extract from *the Times' Educational Supplement* on the necessity for parents and teachers recognising the fact that "Children have a stonger desire for first principles than most people suppose." That is a natural desire of the human mind and the more it is recognised the better will it be for Society and State. This lesson is deduced by a lengthy survey in review of the events of the past year in which "the work of the spirit" which "works for work's sake" is illustrated and pointed out as the only way by which the triumph of righteousness in the end can be secured. The spiritless education now in vogue both in England and India is touched upon and the necessity of a complete change in the conception of education is pointed out as one of the most pressing educational needs of the hour. The lesson of the last year thus set forth is illustrated by a parallel from the traditional lore of the country and its moral is credited to the New Year's account as its "inheritance" from the past year. The Viceroy on Educational Efficiency and Sir Rabindranath's address on the vehicle of teaching are dwelt upon as giving weight to the plea for the "new conception of education which to India is as old as the Himalayas." Other articles of interest are: Books and how to read them; on wages: an economic lesson; the Old Man's comforts and how he gained them; the Golden necklace - a tale of modern times; a short story on Brotherly Love and Health notes under Sanitation Columns.—*The Indian Patriot, dated* 24th *january* 1916.

THE VIVEKACHINTAMANI.—The current number of this popular Tamil monthly contains a number of interesting articles illustrating that "children have a stronger desire for first principles than most people suppose." The "Viceroy on educational efficiency" "Vehicle of teaching"—"Sir Rabindranath Tagores' address" stories and illustrations form its most special features.—*The Hindu, dated 24th January*, 1916.

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-11

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸ ௵ மாசி ௴

# விவேக சிந்தாமணி

February-March. 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றோ மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சர்யத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யார்ச்சரிய மோதா னவர்க்கு."

## "EDUCATION, AS IMPORTANT AS WAR SERVICE."

## யுத்தசிக்ஷையைப்போல் பாலசிக்ஷையும் அவசியமானதே.

இப்பொழுது நடந்துவரும் பார'தப்போர் வெகு விந்தையானது: ஏனென்றால் அதனால் ஜனசமூகங்கள் எல்லாம் அவரவர்கள் குற்றங் குறைகளை யோர்ந்து திருத்திக்கொள்ள இது தெய்விகமாய் வாய்ந்ததோர் சாதனமாயிருக்கிறது. இதனால் பணம் பெரிதென்று நினைத்திருந்தவர்களெல்லாம் பணக்குவியலால் மட்டும் ஆவதொன்றில்லை; பணத்திலும் குணத்தின் பெருமையே பெருமையென்று கண்டுகொண்டார்கள். இது மிகவும் முக்கியமான நற்போதனையல்லவா!

'இரண்டாவது: "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்று வல்லடிவழக்குத் தொடுத்துவந்தவர்களெல்லாரும் ஜெர்மனியின் வல்லடிவழக்கையும் அதனால் உலகத்துக்கு விளைந்த அநர்த்த பரம்பரையையும் உணர்ந்துகொண்டு, முரட்டுபலம் பொதுஜன க்ஷேமத்துக்குப் பிரதிகூலாஸ்பதமேயன்றி அநுகூலாஸ்பதமில்லையென்று அறிந்துகொண்டிருக்கிறார்கள்.

மூன்றாவது: நாஸ்திகபாவமுள்ளவர்களெல்லாம், நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைப்பதையும், தெய்வசங்கல்பம் நிறைவேறுவதாயிருக்க மனிதசங்கல்பம் நிறைவேறாது நிலைகுலைந்து சிதறிப்போவதையு முணர்ந்து, மனிதனுடைய சிற்றறிவுக்கெட்டாததாய் பேரறிவுள்ளதும் நினைத்தது முடிக்கும் ஆற்றலுடையதுமாய் ஆத்மசக்தி யொன்று (அறிவின் திறன்) இருக்கிறதென்றும் அது தன்னந்தானே தர்மவழிபற்றி யுழைத்துக்காரியத்தை முடித்துக்கொள்ளும் திறமை வாய்ந்ததாயிருக்கிறதென்றும் உணர்ந்து வருகிறார்கள்.

நான்காவது: ஆத்மசக்தி வேலை செய்து வரும் வகையானது மனிதன் தட்டுக்கெட்டுத் தடுமாறிக்கொண்டு முன் பின் பொருந்தாது உழைக்கும் உழைப்பைப்போல் இன்றி, நித்தியமாய், நிர்மலமாய், நிர்விகாரமாய், நிராலம்பமாய் (நிராதரவாய், தானே தானாய்) இருக்கும் ஸ்வயம்பிரகாச அறிவு ஒன்றுக்குமட்டும் கட்டுப்பட்டு வேறெந்தத் தடைக்கும் கட்டுப்படாததாயிருக்கிறதென்று உணர்ந்து வருகிறார்கள். அந்த ஆத்ம சக்தியானது தாமரையிலையிற்றண்ணீர்போல் விஷயப் பிரவிர்த்தியில் ஒட்டியும் ஒட்டாமல் விமுக்தமாயிருந்து நிஷ்காமியமாக வேலைசெய்வதால் அது சிக்கல் முக்கலான சங்கடங்களில் அகப்பட்டுக்கொள்வதில்லையென்றும் அகப்பட்டுக்கொண்டதாகத் தோன்றினாலும் அதனுடைய விமுக்த லக்ஷணத்தால் அது தளைகளையெல்லாம் அறுத்துக்கொண்டு தன் சக்திக்குக் குறைவுவராமல் வேலைசெய்து வருகிறதென்றும் சிறிது உணர்ந்து வருகிறார்கள். ஸர் ராபர்ட் பேடன்-பௌ

வல் அவர்கள் நன்றாக எடுத்துச்சொல்கிறபடி இந்தப் பார’தயுத்தம் ‘கடைசியாகப் போதித்த நீதி யென்னவெனில் இதுவரையில் குழந்தைகளைப் படிப்பித்துவரச் செய்யப்பட்டு வரும் முயற்சிகளெல்லாம் அக்குழந்தைகளின் ஆத்மசக்தியைக்(Spiritual activities)கிளப்பிவிட்டு பயிர்ச்சி செய்வதாயின்றி ‘விழலுக்கிறைத்த நீர்போல்’ விருதாவில் கழிந்ததென்றுள்ள ‘ஞானம்’ உதிக்கச் செய்ததே. இந்தப் பாடம் படிக்க ஐரோப்பிய தேசத்தார்கள் எல்லாரும் கிறிஸ்து பிறந்தபின் 2000-வருஷங்களா யுழைத்துவந்தும் இது அவர்கள் மனத்தில் ஏறினதில்லை. இப்பொழுதுதான் இந்த யுத்தத்தில் பட்டனுபவித்த சொந்த அனுபவங்களினால் பாரதூரயோசனை செய்ய வல்லவர்களான சிலரால் ஊகித்துணர்ந்து போதிக்கப்பட்டு வருகிறது.

“சொக்கா சொக்கா சோறுண்டோ?”

“சோழியன் வந்து கெடுத்தாண்டோ!”

என்றொரு அம்மையார் கதையுண்டு. அதை யெல்லாரும் கேள்விப்பட்டிருப்பார்கள். அதன் முடிப்பினை யென்னவென்றால்: இருள் வெளியில் (மனவிருள் மண்டியவிடத்தில்) பசியாறவுண்டு பிழைத்துவரும் பேய் பிசாசுகள் (மருளிற் பிறந்த மனோபாவங்கள்) விளக்கு வெளிச்சத்தைக் கண்டால் (அறிவோதய மானவிடத்து)ப் பிழைப்புக்கெட்டு இருக்கவிடமின்றி ஓடிப்போம்-என்பதே. ஒருவன் இருட்டில் சோறுதின்றுவர அவன் கொல்லைப்புறத்திலுள்ள பிசாசுகள் அச்சோற்றின் ஸத்தான பாகத்தை அவனுணராமல் உண்டு கொழுத்து வந்தன. நடராஜ பக்தனாகிய சோழியன் ஒருவன் (தில்லைவாழந்தணர் கூட்டத்தான்) அவன் வீட்டுக்குவர, அவன் இருட்டில் சோறுண்டு, உண்ட சோறு உடப்பில் ஒட்டாமல் பரிதபித்துழல்வதைக் கண்டு, அவனுக்கு விளக்கு வெளிச்சத்தால் சோறுண்ணவேண்டியதின் அவசியத்தைப் போதித்துச் சொன்னான். அது முதல் பேய்களுக்குப் பிழைப்புக் கெட்டுப்போய்விட்டது. அவனும் சம்பத்தடைந்து வாழ்ந்தான். அந்த தரித்திரன் இருட்டில் சோறுண்டதுபோல, ஜனசமூகங்களுக்குத் தலைமை ஸ்தானத்திலுள்ள துரைத்தன காரியஸ்தர்கள் ஜனசமூகச் செல்வமாகிய (“Children are the chief asset of the Nation”) குழந்தைகளுக்கு மனவிருட்டு நீங்காமற்றானே (இருட்டில்) சோறு போட்டு வந்தார்கள். அதாவது, ஜீவனோபாயம் போதித்து வந்தார்கள். மனவிருள் நீங்காத காரணத்தால் அவர்கள் அஜ்ஞானத்திலுழன்று தானே ஜீவனவகைதேடி யுழைத்து, உழைத்த உழைப்புச் சிறக்காமல் சீர்கெட்டு சிறுப்பாணிப்பட்டார்கள். இந்த வுண்மை அவர்களுக்கு சாதாரண காலங்களில் விளங்கவில்லை. தரித்திரன் வீட்டுக்குச் சோழியன் விருந்தாக வந்ததுபோல், இந்த பார’தப்போரானது அதில் உடன்பட்டு ஈடுகொடுத்துத் தேறச் சக்தியில்லாதவர்களையெல்லாம் அதிலிழுத்துவிட்டு, அவர்கள் நாகரிகம்பெற்றதாகக் கொண்ட எண்ணங்களெல்லாம் தரித்திரன் உண்ட சோறுபோல் ஜனங்களின் சமஷ்டி சரீரமாகிய தேசப்பொதுசமூகத்தில் ஒட்டி உறங்கொடுக்காமல் கழிந்துபோனதைக் காட்டிவிட்டிருக்கிறது.

நிஷ்காம்ய கர்மம் செய்வதின் பெருமையையும் அதன் அவசியத்தையும் இப்பொழுதுதான் அவர்கள் உணரத்துவக்கி யிருக்கிறார்கள். ஏற்கனவே லண்டன் டைம்ஸ் பத்திரிகை இது விஷயமாய் பெற்றோர்க்கு ஞானபோதம் செய்யத் துவக்கியிருப்பதைச் சென்ற சஞ்சிகையின் முகட்டில் அப்படியே இங்கிலீஷில் அச்சிட்டு வெளியிட்டு அதன் உட்கருத்தை உதாஹரித்துக் காட்டி யெழுதி யிருந்தோம். “The philosophy of the spirit” என்று அந்த டைம்ஸ் பத்திரிகையில் போதிக்கப்பட்டிருந்த உண்மை பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் குருக்ஷேத்திரத்தில் யுத்த முனையிலிருந்து கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்குப் போ

தித்ததன்றி வேறென்றுமில்லை. அதையே யேசுகிறிஸ்து அவருக்குப்பின் அவதாரமாகிப் போதித்துளார். நித்திய பரம்பரையாக அவதாரமாகி ஆத்ம ஞானத்தை வளர்த்துவரும் யோகிகள், ஞானிகள், முனிவர்கள் எல்லாரும் ஆசைப்பட்டுழைப்பதெல்லாம் மனம் பற்றற்ற நிலையிலிருந்து அறிவையாச்ரயித்து நின்று, தனக்கென்று ஒன்று வேண்டாது பரோபகாரமாகத்தானே எல்லா வேலைகளையும் செய்து வரப் பழகல்வேண்டுமென்றே யன்றி வேறொன்றுக்குமில்லை.

"உருவிலாகும் சித்தியெல்லாம் உலகத்தோர்க்கே" என்றோதியதின் உண்மையும் இதுவே யன்றி வேறில்லை. ஆதலால் இச்சமயத்தில் சண்டைக்கு நிற்கக்கச்சைகட்டிக்கொண்டு புறப்படுகிறவர்கள் செய்யும் போர்ச் சேவகத்தைப் போல் குழந்தைகளை நல்வழியில் படிப்பிக்க முயற்சிப்பதும் தேசத்தின் யோகக்ஷேமத்துக்கு இன்றியமையாத சாதனமாயிருப்பதால் அத்துறையிலிறங்கிச் சாதகர்களா யிருந்துழைப்பவர்கள் செய் ஊழியமும் போர்ச் சேவகத்தைப்போல இந்த ஆபத்துச்சமயத்திற்கு இன்றியமையாததோர் முயற்சிதானென்று ஆங்கிலேயர் ஒருவர்தானே வற்புறுத்திக்கூறி அதற்காக உழைத்து வருவதைக்கேட்கச் சந்தோஷப்படுகிறோம்.

ஆங்கிலேய வித்யாமந்திரிக்காகப் பேசிய லார்ட் ஸெல்போர்ன் அவர்கள் பள்ளிப் பிள்ளைகளுக்குச் சமஷ்டிசேவையின் முக்கியத்தை (Duties of citizenship)ப் பற்றிப் போதிக்க வேண்டியது மிகவும் அவசியம் தானென்று ஒப்புக்கொண்டிருக்கிறார். சமஷ்டிசேவையின் முக்கியம் சமஷ்டி சேவையின் தர்மமுணர்ந்தவர்கள் மனத்தில் தானேயுதிக்குமாதலால், தன்மதிப்பு, தன்னறிவு, தன்னைக்கொடுத்தலாகிய 'ஸ்வஸ்வா:' என்னும் பெரிய ஆத்மவுணர்ச்சிகளுண்டாகக் குழந்தைகளுக்குப் போதித்தால் சமஷ்டிபாவத்தில் நகரமாக்களாகப் பொதுக்ஷேமத்துக் குழைக்கவேண்டிய கடமைகள்தானே செய்யவரும் என்று ஸர் பேடன்-பௌவல் வற்புறுத்திக் கூறுகிறார்.

ஆங்கிலேயருக்குப் புதிதாய்ப்படும் இந்த வுண்மைகளெல்லாம் இத்தேசத்தாருக்குப் புராதனமா யேற்பட்ட பிதிரார்ச்சித பொக்கிஷமாக விருக்கிறது. அதை யனுபவித்து ஆள அவர்களுக்குத் திறமையில்லாமலிருப்பது அவர்கள் மனப்பயிர்ச்சிக் குறைவினாலேற்பட்டது. இதனால் பாலப்பருவம் வீணில் கழிகிறது. இந்த வீண் நஷ்டம் நேராதபடி காக்க தற்சமயம் இந்த வுண்மைகளை யுணர்ந்த இந்தியர்தானே இந்தியாவின் வித்யாமந்திரி ஸ்தானத்திலிருக்கிறாராதலால், அவர் போர்ச் சேவகத்தைப்போல் இக்காலத்துக்கு மிக முக்கியமானதாயுள்ள சமஷ்டி சேவையைப் பிரபலப்படுத்தவேண்டிய முயற்சி யெடுத்துக்கொள்வாரென்று எல்லாரும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இது விஷயமாய் நமது இராஜப் பிரதிநிதியாகிய கனம் தங்கிய லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் "பாலர் திருவிழா" (Children's Day) ஏற்படுத்தினதில் ஏற்கனவே இத்தேசத்துக் குழந்தைகளுக்கு ஒரு பெரிய சாதகமளித்திருக்கிறார். அதை யொட்டிநாட்டுப் படிப்பிலும் அவசியமாகச் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்து கற்ற-கல்வி மனப்பழக்கம் தருவதாயிருக்கும்படிச் செய்யவேண்டும். "தன்னை வென்றவன் தலைவனவன்" என்றும் "தன்னைக் குடிகெடுக்கும் நெஞ்சுக்குக் குற்றேவல் செய்யின் பிடிபடுக்கப்பட்ட களிறு" என்றும் பெரியோர் வசனம் இத்தேசத்தில்பழமொழியாக வழங்கிவருவதால் இதற்கனுகுணமாகப் பள்ளியிற்போதிக்க்ச் சீர்திருத்தங்கள் செய்வது அவருக்கு முடியாத காரியமாயிருக்காதென்று நினைக்கிறோம்.

## "A NATION RISES NO HIGHER THAN ITS MOTHERS."

### SOME THOUGHTS ON THE EDUCATION OF WOMEN.

"If India was to develop, the Indian women must be allowed to develop on their own lines. They must be educated on lines beneficial to Hindus. To copy the European would only result in miserable imitation. Every Hindu woman no doubt possessed some of the qualities of Sita. There were other qualities in her which had to be developed. People often complain of the want of religious training in Hindu youths. But if the mothers were properly educated there would be no room for that complaint."—SIR S. SUBRAMANIYA IYER, *on the lessons taught by Sri Ramakrishna's life.*

"Miss Hughes insisted that understanding of the East was necessary before Europeans could attempt to instruct Orientals. The history of the country should also be known. No race could properly educate another, each race must evolve its own education."—Miss Hughes at a meeting of the N.I.A., London, on the "Education of the women of the Far East."

"If India is to have no future, then by all means leave the women ignorant, but if you look to a bright future, then for every day you postpone the education of your women, you postpone in equal measure, and in exact proportiou that bright future, for, "a nation rises no higher than its mothers."—Mrs. (Now Lady) Benson.

## "தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை."

### பெண்பாலார்க்குக் கல்விபோதித்தலைப்பற்றி.

இந்தியாவின் தற்கால நிலைமையும் வருங்காலச்சீரும் எல்லாராலும் மிகக் கவனிக்கப்பட்டு வருகிறது. பூர்வகாலத்தில் ஹிந்துக்கள் நாகரிகத்திலும் செல்வத்திலும் பேர்போனவர்களாயிருந்தார்களென்பதிற் சந்தேகமில்லை. அவருடையசந்ததியார்களாகியஇக்காலத்து ஹிந்துக்கள் ஒற்றுமையின்றி செல்லிக்காய் மூட்டைகளாய் பிரிடிஷ் அதிகாரம் என்னும் கோணிப்பையினால் கட்டுண்டு கிடக்கிறார்களென்பதும் ஸ்பஷ்டம். இப்பொழுது இந்தியர்கள் "முன்னுக்குவந்து சீர்பெற்று விளங்குவது எப்படி?" என்பது எல்லார் சிந்தையையும் கவரத்தக்க முக்கியவிஷயமாயிருக்கிறது. சிலர் சாஸ்திரங்களை அனுஷ்டித்தாலன்றி ஹிந்துக்கள் முன்னுக்குவாரார்கள் என்றுகிர்கள். சிலர் இதரமதஸ்தர்களுடைய 'ஆர்ப்பாடங்கள் அடங்க ஹிந்துக்கள் உழைத்தாலன்றி கடைத்தேறார் என்கிறார்கள். சிலர் ஐரோப்பியர்களைப்பார்த்து நமது ஆசார அனுஷ்டானங்களைச் சீர்திருத்திக்கொண்டாலன்றி நாம் உருப்படோமென்கிறார்கள். இன்னும் சிலர் ஜாதிமதபேதங்களை யெல்லாம் விட்டொழித்து எல்லாரும் வித்தியாசமின்றி கலந்து ஒன்று பட்டாலன்றி நமக்கு கதிமோக்ஷமில்லை யென்கிறார்கள். இப்படி பலர் பலவிதமாகச்சொல்லி 'ஒரு சாரார் மற்றொரு சாரார்மீது குற்றங்கண்டுபிடிப்பதும்' அவர்கள் வழிவகைகளைக் கண்டித்து தாங்கள் போகிறவழியே புனிதமானதுஎன்று விதண்டாவாதம் செய்வதுமாயிருக்கிறார்கள். இது விஷயமாக பாரதூர யோஜனைசெய்து ஆர அமர ஆராய்ந்து சிந்திக்கில் இவையெல்லாம் மேலோட்டமானவழிகளேயன்றி மூலாதாரத்தைப் பற்றினவையல்ல வென்று ஸ்பஷ்டமாய் விளங்கும். காலதேசவஸ்து பரிச்சேதங்களுக்குட்படாமலும் அவைகளால் மாறுபடாமலுமிருக்கும் வஸ்து ஒன்றே. அது "ஏவமேவாத்வைதம்" என்னும் சுருதி வாக்கியத்துக்கிலக்காய் இரண்டற்று ஏகமாய் விளங்கும் மூலகாரணப்பொருள் ஒன்றேயாம். இந்த ஏகமான நித்ய சுத்தமுத்தப்பொருளை யனுசரித்து விளங்கும் தத்துவங்கள் அனேகமுள. இத்தத்துவங்களை யாதாரமாய்க் கொண்ட கொள்கைகள் அநேக மிருக்கின்றன. இந்தக் கொள்கைகளையுள்ளபடியுணர்ந்து காலதேச வர்த்தமானங்களுக் கிசைய அவைகளைப்பொருந்த அமைத்து அனுஷ்டிப்பவர் யாரோ அவரே எத்தேசத்தராயினும் எம்மதத்தராயினும் எக்காலத்தவராயினும் உண்மையில் உள்ளபடி

அடைத்தேறிப் பிழைப்பவர்களாவார்கள். மற்றவர்களெல்லாம் உத்ஜீவிக்கப் போட்டிபோட்டுக்கொண்டு மாண்டு மடியவேண்டியவர்களேயாம். நமது சாஸ்திரங்களுக்கு எனவ்வளவு மேன்மையென்றால் அதைச் செய்தவர்கள் தீர்க்கதரிசிகளாய் உண்மைக்கொத்தவர்களாயிருந்து தங்கள் ஸ்வர்னுபவச் செல்வப் பெருக்காலுண்டான ஞானதிர்ஷ்டி கொண்டு எக்காலத்துக்கும் பொருந்த ஜனசமூகங்களும் ஜீவகோடிகளும் சத்தியத்துக்கொப்ப சன்மார்க்கவழியனுசரித்து சாம்பிராஜ்பம்பெற்றுய்யும் பொருட்டு 'விர்த்தி க்ஷப லய' முறைபற்றி முக்கியமான மூலக்கொள்கைகளை காலத்துக்கேற்கப் பொதுவாய் விளங்கத் திரட்டி சாஸ்திரங்களாக்கிவைத்தார்கள். இந்த சாஸ்திரங்கள் 'எக்காலத்துக்கும் பொருந்துபவையென்பது' காலாதீதமான தத்துவக்கொள்கைகள் எக்காலத்து மொன்றேயென்னுமர்த்தத்தில் பொருந்துமேயன்றி மற்றப்படி காலதேச வர்த்தமானங்களை யொட்டிப்பார்த்தால் பொருந்தாவாம். சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொள்வோர் சாஸ்திராதீதமாய் சாஸ்திரங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கும் உண்மையை யுள்ளபடி யறியாது வார்த்தைகளை மட்டுங்கொண்டு வாக்கியார்த்தம் செய்யப் பார்ப்பது முற்றும் பலிக்காமற்போகிறது. பூர்வகாலத்தில் ஹிந்து ராஜாக்கள் ஞானிகளைப் பூஜித்து அவர்கள் வாக்கைச் சிரமேல்கொண்டு இராஜ்ஜியபாரம் செய்து வந்தார்கள். இக்காலத்து கவர்ன்மெண்டாரும் அப்படியே தர்மத்தை மேலாக அனுசரித்து இராஜ்ஜியபாரம் செய்கிறவர்களாயிருக்கிறார்கள். ஆள்வோருக்கும் ஆளப்படுவோர்க்கும் ஜாதிமதவேற்றுமையும் இன்னும்பல்வேறுபாடுகளு மியல்பாயேற்பட்டிருப்பதால் அவர்கள் எக்காலத்துக்கும் பொதுவான சாஸ்திர உண்மைகளை யுணர்ந்து உள்ளபடி அதை இத்தேசத்தின் பூர்வசரித்திரத்துக்கும்ஜனங்களின்தேகமனோ தர்மங்களுக்கும் பொருந்த அனுஷ்டிப்பது அவர்களுக்குசாத்தியமாகவில்லை. ஹிந்துமதமும் ஹிந்துநாகரிகமும் உண்மையில் உள்ளபடி ஐரோப்பியர் மதம் ஐரோப்பியர் நாகரிகம் இவற்றைவிட மேலானதாகவிருப்பது வாஸ்தவமானால் (வாஸ்தவமென்பதிற் சந்தேகமில்லை) மேற்படியிலுள்ளவர்கள் கீழ்ப்படியிலுள்ளார் உண்மையையும் அனுபவத்தையும் உள்ளபடியறிந்து தங்கள் அனுபவத்திற்குக் கொண்டுவருவது சுலபமாம். கீழ்ப்படியிலுள்ளார் மேற்படியிலுள்ள நாகரிகத்தினுண்மையையுள்ளபடி யுணர்வது அசாத்தியமாம். அத்வைத சித்தாந்தம்பற்றி ஆத்மானந்தானுபவம் பெற்றவர்கள் 'விசிஷ்டாத்வைதம்' 'துவைதம்' 'சகுணோபாசனை' முதலியவற்றை எளிதிலறிந்து கொள்ளலாம். அப்படியே கீழ்ப்படியிலுள்ளவர்கள் மேற்படியுண்மையை அந்தப்படியிலிருந்து உணர சாத்தியமில்லை. பகவத்கீதையை அனுபவார்த்தமாக அறிந்தவர்கள் கிறிஸ்துவையும் கிறிஸ்துபோதமாம் பைபிளிலடங்கிய உண்மைகளையும் உணருவது இலகுவாம். கிறிஸ்துவை சகுணோபாசனை செய்து அவ்வுபாஸனாபலன் பெற்றவர்கள் நிர்குணோபாசனையை யுள்ளபடி யுணர்தல் எளிதன்று. இந்த வுண்மையை யுணராமல் சில கிறிஸ்தவ பாதிரிகள் பகவத்கீதை பைபிளுக்கு உபகாரண நூல் என்று சொல்லி வாதிக்கிறார்கள். இது அவர்கள் அறியாமையால் சொல்வது. அறியாமை யகன்றாலொழிய அவர்கள் உண்மையை உள்ளபடி யுணரார். இது நிற்க. இப்பொழுது இவையெல்லாம் தலைப்பெயரிலுள்ள வாக்கியத்துக்குப் பொருந்துவதெப்படி என்கிற கேள்வி பிறக்கலாம். அதைக் கீழே சொல்கிறோம்.

ஹிந்துக்கள் முன்னுக்குவர வழியென்னவென்றால் தாய்மார்களை முன்னுக்குக் கொண்டுவருவதே உண்மையான வழி. "தாயைப் போல பிள்ளை, நூலைப்போல சேலை" யாதலால், தாய் சீர்பட்டாலன்றி, பிள்ளை சீர்படாது. ஏனென்றால் நூல் எவ்வளவு சந்நமாயிருக்குமோ அவ்வளவு சந்நமாகத்தானிருக்கும்

சேலையும், நெசவுகரணங்களும் நெசவு வேலைக்காரனும் எவ்வளவு மேன்மைப்பட்டிருக்கினும் நூலைவிட சந்நமான சேலை நெய்யமுடியுமா? புருஷர்கள் படித்துத்தேறி கல்விப்பயிற்சியிலிருந்தவர்களாயிருக்கிறார்களே தாயைப்போல தகப்பனும் உற்பத்திகாரணன் தானே, தகப்பனுடைய விர்த்தியும் சீர்மையும் பிள்ளைகளிடத்தில் விளங்காதா வென்று கேட்கலாம். ஆனாலதற்குள்ள குறையைக் கவனிக்கவேண்டும். வித்து மட்டும் நல்லதாயிருந்து, விதைக்கும் நிலம் வளங்குன்றி வரட்டுத்தரையாக விருந்தால் அவ்வித்து உள்ளபடி பலனைக்கொடுக்குமா? "தண்ணீர்நிலநலத்தால் தக்கோர்குணங் கொடையால்" என்றிருப்பதால், தாய் தகப்பன் இருவருடைய குணங்களும் பிள்ளையினிடத்தில் பிரதிபலிப்பது உண்மையாயினும், தகப்பனுடைய சீர்மையும் மேன்மையும் தாயினுடைய நலத்தினளவாகவேயிருக்கும் பிள்ளையினிடத்தில். தண்ணீர் நலம் அதுஊறும் நிலத்தினுடைய நலத்தினளவாகவேயிருப்பது போல் பிள்ளைகளின் நேர்மையும் சீர்மையும் தாயினது நேர்மை சீர்மையின் அளவினதாகவேயிருக்கும். இது ஒரு பெரிய உண்மை. இது மாறாத தத்துவக்கொள்கை. இந்த உண்மையை மிஸ்ஸஸ் பென்ஸன் துரைசானி வற்புறுத்திக்கூறி "ஹிந்துக்கள் முன்னுக்கு வரவேண்டுமானால் பெண்களைப்படிப்பித்து முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்: ஏனென்றால் ஒருஜாதியின் நேர்மையும் சீர்மையும் அச்சாதியிலுள்ள தாய்மார்களின் நேர்மை சீர்மைக்கு மேலானதாக ஒருக்காலும் ஆகாது" என்று சொன்னார். ஜஸ்டிஸ் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்களும் இந்த உண்மையையே வற்புறுத்தி ஹிந்து ஸ்திரீகள் முன்னுக்குவந்தாலன்றி ஹிந்து வாலிபர்கள் முன்னுக்கு வரார் என்று சொன்னார். தாய்மார்கள் பக்திசிரத்தையுள்ளவர்களாயிருந்தால் பிள்ளைகளும் அப்படியேயிருப்பார்கள். நேற்றையதினம் நாம் பி. ஏ. பரீக்ஷையிற் றேறின ஒரு வாலிபனைக்கண்டு பேசிக்கொண்டிருக்கையில் அச்சிறுவரது உத்தமகுணத்தைக்கண்டு வியந்து "அப்பா உனக்கு இவ்வளவு தர்மசிந்தைபடிந்துளது எப்படி? மதபோதனையினாலுண்டாயிற்றா?" என்று கேட்கலானோம். அதற்கு அவ்விளைஞன் கொடுத்த விடை மிகவும் உண்மையாயிருந்தது. 'நான் பக்திசிரத்தை நிறைந்த தாய் முதலானோர் நடுவேயிருந்துவளர்ந்தேன். அவர்கள் தர்மசிந்தனை யென்னிருதயத்தை நானறியாதேபற்றி என்னையாண்டதன்றி பள்ளிப் பழக்கத்தினால் இந்த தர்மசிந்தையுண்டானதென்று சொல்வதற்கில்லை' யென்று செப்பினன். அவ்வாலிபச் சிரேஷ்டனை அவன் குடும்பத்தாரோடு நாமறிவோமாகலால் அவ்விளைஞன் உண்மையேயே செப்பினனென்று நாம் உறுதியாய்க் கூறுவோம். பி. ஏ. பரீக்ஷையிற்றேறும்படி படித்தும், அவன் படித்த கலாசாலையில் மதபோதனையிருந்தும், அவன் உள்ளம் பாலப்பருவமுதல் பழகிய தன் தாயின் தர்மசிந்தனையால் உருகியுருவாயிற்றேயன்றி அவன் பள்ளியிற் படித்த படிப்பினாலில்லை. ஆகையால் ஹிந்துக்கள் முன்னுக்கு வரவேண்டுமானால், ஹிந்துக்களில் தாய்மார்களாகவிருப்பவர்களை முதல் முதல் முன்னுக்குக் கொண்டுவரல்வேண்டும். அதவும் அவர்களைத் தங்கள் ஸ்வதாவில்விட்டு, ஹிந்துமதவழியில் அவர்கள் மேன்மையடைந்து விளங்கச்செய்யவேண்டும். அப்பொழுதுதான் தீரமும், வீரமும், சத்தியமும் பொருந்திய புண்யாத்மாக்கள் புனர் ஜன்மமெடுத்து ஹிந்துக்களைக் கடைத்தேறச்செய்ய காருண்ய புருஷர்களாக வந்தவதரிப்பார்கள். சத்புருஷர்கள் நிறைந்துள்ள ஜனசமூகம் எப்போதும் உத்தமவழியில் விர்த்தியடைந்து உலகத்தில் பிரக்கியாதிபெற்று விளங்குவதோடு, இவ்வுலகமே அவர்களால் முன்னுக்கு வருவதாகும். ஐரோப்பியர்கள் ஹிந்துக்களுக்குப் போதிக்கவருமுன் ஹிந்துக்களுடைய குணங்களையும் அவர்கள் பூர்வசரித்திரங்களையும் அறியவேண்டியதவசியம். அப்படியே நாமும் ஆங்கிலேயர்களிடத்துச் செல்வாக்குப்பெற அவர்கள் வழியிலிறங்கி அவர்களது உண்மைகளையும் உத்தம குணங்களையும் நம்மில் விளங்கச் செய்துகொள்ளல்வேண்டும். இதுவே உண்மையில் முன்னுக்குவரும் வழியாம்.

## THE BENARES HINDU UNIVERSITY.
## ஸ்ரீகாசி ஹிந்து யூனிவர்ஸிடி.

Repairing "the weakest spot in our system."
'Education without Religion is of but little value.'

பிப்ரவரிமீ 4ௗ வெள்ளிக்கிழமை இந்தியாவின் வித்யா சரித்திரத்தில் மிகவும் முக்கியமான ஓர் நாளாய்விட்டது. அன்றையதினம் தியானம் கனம்பொருந்திய இராஜப்பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் இந்தியாவிலுள்ள ஸ்வதேசமன்னர்கள் பிரிடிஷ் இந்தியாவிலுள்ள இராஜதானி கவர்னர்கள், உதவிக்கவர்னர்கள், கௌன்ஸில் மெம்பர்கள் மற்றுமுள்ள பிரமுகர்கள் பண்டிதரத்னங்கள் சூழ்ந்திருக்க வெகு கோலாகலமாக காசியில் ஸ்தாபிதமாகத் தீர்மானிக்கப்பட்ட "ஹிந்து யூனிவர்ஸிடி" என்னும் ஹிந்து ஸர்வகலாசாலை ஸ்தாபனத்தின் அஸ்திவாரக்கல் வைக்கும் சடங்கை வெகு விமரிசையாக நிறைவேற்றினர். அந்தக்கல் வைத்ததோடு இந்தியாவின் வித்யாப்பியாச முயற்சியில் ஓர் புதியகொள்கை அங்கீகரிக்கப்பட்டது. இதுவரையில் இத்தேசத்தில் மதசிக்ஷையைத் தள்ளிப் படிப்புச் சொல்லிக்கொடுத்து வந்தார்கள். ஏனெனில், அநேக மதங்களிருப்பதால் சமயவேற்றுமையினால் வித்தியாசம் ஏற்படுமென்றும் அதனால் கலகமுண்டாகலாமென்றும் அஞ்சினதாகச் சொன்னார்கள். லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் அத்தருணம் செய்த பிரசங்கத்தில் லார்ட் ரிப்பன் காலத்தில் நியமிக்கப்பட்ட "எடியுகேஷன் கமிஷன்" என்னும் வித்யாசம்பந்தமாக விசாரணைசெய்து ரிபோர்ட்டு செய்வதற்கான கமிஷன் நியமிக்கப்பட்டதையும் அவர்கள் செய்த வேலையையும் குறித்துப் புகழ்ந்து அந்தக் கமிஷன்சபையார் குணத்துக்கு இன்றியமையாத மதசிக்ஷையைத் தள்ளிப் படிப்புச்சொல்லிக் கொடுப்பது ஒரு பெருங்குறையாயிருக்கிறதென்று சொன்னதைக் குறிப்பிட்டு, அது மிகவும் வாஸ்தவமென்றும், மதசிக்ஷையில்லாத படிப்பு மனப்பழக்கத்துக்குக் கேடு என்பதை ஒப்புக்கொண்டு, அந்தக்குறையை நிவர்த்திசெய்யும் பொருட்டே இந்த ஹிந்து யூனிவர்ஸிடி ஸ்தாபிக்கப்பட்டதென்றும், பள்ளிச்சிக்ஷையினாலும் உபாத்தியாயர்கள் போதகாசிரியர்கள் நற்பழக்கத்தினாலும் ஏதோ சிறிது குணவிசேஷம் லபிக்கலாமாயினும் அவை மதசிக்ஷைக்கீடாகா வென்றும் மதசிக்ஷையில்லாதபடிப்பு பிரயோஜனமற்றதாகிறதென்றும், குணப்பெருமைக்கு மதசம்பந்தமான சிக்ஷா தீக்ஷைகளைப்போல் அடுத்த சாதனங்கள் வேறு இல்லையென்றும் அவருடைய உள்ளமுணர்ந்த உண்மையை வற்புறுத்திக் கூறினர். ஹிந்து யூனிவர்ஸிடி, மற்ற யூனிவர்ஸிடிகளைப்போல், பரீக்ஷைமட்டும் நடத்துவதாகவின்றி, பிள்ளைகளை யூனிவர்ஸிடியில் வசிக்கச்செய்து, பூர்வம் குருகுலவாசம் செய்துவந்த வழக்கம்போல், போதகாசிரியர்களும் மாணாக்கர்களும் அங்கேயே வசித்து குரு-சிஷ்ய ஸம்பிரதாயம்பற்றி மனதைச் சிக்ஷா தீக்ஷைகளில் பழக்கி உத்தமகுண ஸம்பத்துக்கு அனுகூலமான சாதன சாதகங்களை அப்பியாஸித்து அனுஷ்டித்துவரச் செய்வார்களென்றும் அதோடு மேற்றிசை நாகரிக வித்தையில் உத்தமமான ஐசுவரிய விர்த்திக்கின்றியமையாத கலைகளும் போதிக்கப்பட்டு வருமென்றும் சொன்னார். பூர்வீகநாகரிக ஸம்பிரதாயத்தில் புது நாகரிக ஸம்பிரதாயமும் பொருந்தப் பொருத்தி முற்கால தற்காலவித்தைகளில் சிரேஷ்டமாகவுள்ளவைகளெல்லாம் அங்கு போதிக்கப்படுமென்றும் சொன்னார். அங்கு அவர் பேசியவற்றில் முக்கியமான அம்சங்கள் நாம் சென்ற 30-வருஷகாலமாக இந்த விவேகசிந்தாமணி மூலமாக வற்புறுத்தி வருவதற்கிசைந்தனவாகவே யிருக்கக்கண்டு சந்தோஷிக்கிறோம். இதுவரையில் இந்தியர்கள் ஏகாந்தமாக வுழைத்து வந்த உழைப்பு இனி இந்த ஹிந்து யூனிவர்ஸிடி மூலமாக நமது அரசர்களுடைய அனுமதியும் அங்கிகாரமும் அனுதாப உதவியும் பெற்று நடைபெறுமென்று எண்ணுகிறோம். அப்படிப்பட்ட நல்லகாலம் துவங்கியதென்பதற்கு இந்த ஹிந்து யூனிவர்ஸிடியின் அஸ்திவாரக்கல் ஓர் புதிய அடையாளமாயிருக்கிறதென்று அரசர் பிரதிநிதியவர்களே சொன்னார். (This foundation stone will mark a definite step in the advance towards an ideal that has stirred to its very depths the imagination of India.) லக்ஷிய மில்லாத மனோசிக்ஷை லக்ஷணம்பொருந்திச் சோபிக்காது. லக்ஷிய லக்ஷணமிரண்டிலும், லக்ஷியம் பிரதானம்; லக்ஷணம் அதன் விமர்சனம். லக்ஷியமின்றி லக்ஷணம் பிரகாசித்து விளங்காது. ஆகையால்தான் "இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்புவர்" என்று மேலோர் சொல்லியுள்ளார்.

## "LYRICS AND LAY-SONGS OF TEMPLE-LEGENDS."

"The first help that our boys get here (Bolepur School) on this path (of Spiritual Culture) is from the cultivation of love of Nature and sympathy with all living creatures. . . . Music is of very great help to them—the songs being not of the ordinary hymn type, dry and dydactic, but as full of lyric joy as the author could put in them. You can understand how these songs affect the boys when you know that singing them is the best enjoyment they choose for themselves in their leisure time."—*Sir Rabindranath Tagore* (to an Englishman) *on Spirituality* in *Education.*

## LYRICS AND LAY-SONGS OF TEMPLE-LEGENDS.*

### நாத-கீத நாமகள் சிலம்பொலி.†

இப்புத்தகம் விவேகசிந்தாமணி பத்திராசிரியர் பஞ்சவிம்சதி பாக்கியம் என்கிற 25-வது அப்த பூர்த்தி யுற்சவத்தைக் கொண்டாடிய காலத்தும் அதற்குப் பின்னும் எழுதிய அருள்மொழி நிறைந்து பொருள் மிகச் சிறந்த விஷயங்களைத் திரட்டி விவேகமஞ்சரி 2-ம் புத்தகமாக அச்சிடப்பட்டிருந்ததைப் பல்லோர் வேண்டுகோளின்மேல் இப்பொழுது வெளியிடப்பட்டது. இதன் கருத்து அதன் ஆசிரியர் பின்னுரையிலிருந்து வெளியாகும். அதை இங்கெடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம். ஸர் ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் 'போல்பூரில்' ஸ்தாபித்து நடத்திவரும் பள்ளிக்கூடத்தில் ஆத்மபோதம் செய்யுமுறையை அநுசரித்து ஸ்வாநுபூதிச் செல்வ பொக்கிஷத்திலிருந்து சமயத்துக்குத் தக்கபடி தெரிந்தெடுத்த பாடல்களும் விஷயங்களும் அடங்கியுள்ளன. அவை அது காரணம் பற்றியே "நாத-கீத நாமகள் சிலம்பொலி" யென்று பேரிடப் பெற்றன.

### பின்னுரை.

"பிதற்றுமுணர் வையதத்துப் பிரபஞ்ச
விகற்பமறிவதே வீடு"—ஔவைகுறள்.

"ஆலயந்தொழுவது சாலவு நன்று."
"கோயிலில்லாவூரிற் குடியிருக்கவேண்டாம்."

"பூவுதிரப் பிஞ்சுதிரக் காயுதிரக் கனியுதிர" வென்று பறைபறைந்த மஹான், சாதியில் எப்பிறப்பினனாயினும் குணத்தினால் நிறைந்தவன் அவன் கடமையைச் செய்ய வழியறியாது போகான் என்று காட்டிய மெய்யுதாரணம் உலகத்திற் பயன்படாதொழியவில்லை. இப்பொழுது நடக்கும் பார'தப்போர் காரணமாகக் கல்வியின்பயனைப் பல்தேசத்தாரும் உற்றுணர்ந்தோர்ந்து ஆராய்ந்து இதுவரையில் குழந்தைகளைப் பழக்கிவந்ததிலுள்ள குற்றங் குறைகளை யறிந்து ஆலசியம் தீர்ந்து திருத்துவான் முயற்சிசெய்து வருகிறார்கள். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்ற ஔவை வாக்கின்லக்ஷியார்த்தத்தை அவர்கள் இப்பொழுது சிந்திக்கத்துவக்கியிருக்கிறார்கள். ஏட்டுப் படிப்பு வயிற்றுப்படிப்பிலும் மனப்பழக்கமும் மனப்பழக்கத்தால் சித்திக்கும் குணத்தையுமே மேலானதும் இன்றியமையாததுமாயிருக்கின்ற உண்மையைக் கற்றோர் உணர்த்த உணருவாராயிருக்கிறார்கள். இப்படிப்பட்ட சமயத்தில் "கற்ற கல்விக்கழகு (உளக்) கண்திறக்கப் பெறல்" என்னும் மூதோர் வசனத்தை ஆச்ரயித்து "கண்திறக்கப் பெறல்" ஒன்றே கல்வியின் பிரதானநோக்கமாக வுழைத்துவரல் அத்யாவசியமாகவிருக்கிறது என்பது நாம் சொல்

* Being a study in Temple-Traditions, Relegious Folklore and Children's Songs etc., Selected and reprinted from the Vivekachintamani, 1911-1913. on the occasion of the author's Silver-Jubilee as a Journalist: pp. xvi. A few copies in full cloth a Re. 1-4. *D. K. Agency, Lalitalaya,* 19, *Adam Street, Mylapore.*

† கோயிற் புராணம், சகபுராணம், திருவருட் சிறப்பு, அடியார் வழக்குரை முதலியன அடங்கிய விவேகமஞ்சரி புத்தகம்-2. (விவேக சிந்தாமணியிலிருந்தெடுத்தச்சிடப்பட்டது.) XVI+242 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 1. சில புஸ்தகங்கள் மட்டும் காலிகோ கட்டடம் செய்தது: ரூ. 1-4-0. தபாற்கூலி பிரத்தியேகம். சென்னை, மயிலாப்பூர், லளிதாலயம் (19, ஆடம் தெருவு) அ. ப. ஏஜன்ஸி.

லாமலே அமையும். ஆதலால் உற்றசமயங் கொண்டு ஏற்றகாலங்களில், இப், பிரபஞ்ச விகற்பம்' விளங்க,

"முகத்திற்கண் கொண்டுபார்க்கின்ற மூடர்காள்"
"அகத்திற்கண் கொண்டுபார்ப்பதே ஆனந்தம்."

—என்று சொல்லிய சித்தர் வாக்கைச் சிரமேற்கொண்டு நமது தேச, மத, ஜன, ஆசார, அனுஷ்டான சம்பிரதாயங்களில், கோயிற்புராணம், சகபுராணம், திருவருட்பேறு என்பவாகப் பொதிந்து கிடக்கும் உண்மைகளை ஆராய்ச்சிசெய்து வரலானோம். தற்போது பாலர்க்குழைக்க வேண்டி அதிகாரிகளோடு ஒத்துழைக்கக் கடமைப்பட்டிருப்பதாலும் பலர் நாம் பூர்வம் ஆராய்ச்சி செய்த விஷயங்களைப் பரிவுடன் படித்துணர விரும்பி வற்புறுத்தியதாலும் அவ்விஷயங்களிற் சிலவற்றைத்திரட்டி அச்சிட்டிருந்ததை வித்பாமந்திரிமூலமாய் அடியார்க்கர்ப்பணம் செய்து தனிப்புஸ்தகமாக வெளியிடத்துணிந்தோம். இதிலுள்ள குற்றங் குறைகளையும் மலிந்துகிடக்கும் அச்சுப்பிழைகளையும் பெரியோர் பொறுத்து "குணநாடிக் குற்றமுநாடி, மிகைநாடி மிக்கக்கொளல்" என்றபடி குணத்தைக்கிரகித்துக் குற்றத்தை பொறுப்பார்களென்று பிரார்த்திக்கின்றனன்.

C. V. S.

---

## THE NEW VICEROY.

Dehi, January 6.—His Majesty the King-Emperor on the recommendation of the Prime Minister has been pleased to appoint Frederick John Napier Thesiger, Baron Chelmsford, C. C. M. A., as Viceroy and Governor-General of India in succession to H. E. the Right Honourable Charles Baron Hardinge of Penshurst, P. C., G. C. B. ete.

## புதிய இராஜப்பிரதிநிதி.

கனம் தங்கிய லார்ட்ஹார்டிஞ்சுக்குப் பின் அரசர்பிரதிநிதி ஸ்தானத்தை வகிக்க லார்ட் செம்ஸ்போர்ட் (Lord Chelmsford) அவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் மார்ச்சுமாசக் கடைசியில் (312) வந்து ஏப்பிரல்மீ முதலில் வேலை ஒப்புக்கொள்ளுவார். கனம்தங்கிய லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் ஏப்ரல்மீ 2-உ பம்பாய்க்குவந்து அன்றே கப்பலேறிச் சீமைக்குச் செல்வார்.

## THOMAS ALVA EDISON—THE WONDERFUL INVENTOR.

## அற்புத கற்பித சிகாமணியாகிய தாமஸ் ஆல்வா எடிஸன்.

(BORN 1847.)

இன்றைக்குச் சுமார் 54-வருஷங்களுக்கு முன் அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களிலுள்ள 'டிட்ராய்ட்' பட்டணத்தில் 14-வயதுள்ள ஒரு பையன் அவ்வூர் ரயில் ஸ்டேஷனில் சமாசாரப் பத்திரிகை விற்கும் தொழிலில் அமர்ந்திருந்தான். அந்த ஊரில் 'டிட்ராய்ட் ப்ரீப்ரெஸ்' என்று ஒரு சமாசாரப் பத்திரிகையிருந்தது. அப்போது அமெரிக்கா இரண்டுபட்டு, ஐக்கியமாகாணவாசிகளே இரு கக்ஷியாகப் பிரிந்து இருவருக்கும் ஸிவில் யுத்தம் நடந்துவந்தது. யுத்த சமாசாரம் தெரிந்துகொள்ள ஜனங்கள் ஆவலாயிருந்தார்கள். ரயில்வே ஸ்டேஷனில் போகும் பிரயாணிகளுக்கு அப்போதப்போது வெளியாகும் சமாசாரங்களைத் தெரிவிக்க ஒரு யுக்திசெய்து ரயில்வேஸ்டேஷனிலுள்ள கறுப்புப் பலகைகளில் முக்கிய சமாசாரங்களை எழுதி விளம்பரப்படுத்திவந்தான். இதனால் இப்பையன் பேர் பிரசித்தியடைந்து ரயில்ஸ்டேஷனில் நடக்கும் வியாபாரம் முழுவதும் இவன் கைவசமாகியது. ஒருமுறை யுத்தம் மும்மரமாய் நடந்தபொழுது 2-அணாப் பத்திரிகையை இவன் 10-அணாவுக்கு விற்றுமுதல்செய்து பெரும் லாபம் அடைந்தான். இந்தப் பெருலாபத்தோடு திருப்தியடையாமல், இதை மூலதனமாகக்கொண்டு, ரயில்வண்டித் தொடரிலேயே ஒரு பழையவண்டியில் தேய்ந்துபோன முத்திராக்ஷரங்களை சுலபவிலைக்கு வாங்கி தானே முக்கிய சமாசாரங்களைத் திரட்டி, யச்சுக்கோர்த்து, அச்சிட்டு விற்று வியாபாரம் செய்யத்தலைப்பட்டான். இப்படி இத்துறையில் இவன் வியாபாரம் பல்கிப்பெருக இவன்

மிக விருத்தியடைந்துவந்தான். இப்படி நடந்துவருங்காலையில் ஒருநாள் தற்செயலாய் இவனுடைய தொழில் நடத்தியவண்டி தீப்பற்றிக்கொள்ள, வண்டித்தொடர் முழுவதுந் தீக்கிரையாகத் தெரிந்தது. நல்லவேளையாக அந்த அபாயம் நல்லசமயத்தில் கண்டுபிடித்துத் தவிர்க்கப்பட்டது. ஆனால் அதோடு இவன் தொழில் நின்றுபோக இவனுக்குப் பெரு நஷ்டம் வந்தது. இப்படி பலவிதத்தில் கஷ்டப்பட்டு தன் முயற்சியாலே ஜீவனம் செய்துகொண்டு மேன்மேலும் விர்த்தியை நாடி யுழைத்துவந்த வாலிபச்சிறுவன் தாமஸ் ஆல்வா எடிஸன் என்னும் பேருடையவன்.,

இப்பொழுது எடிஸன் என்னும் பேர் இவ்வுலகெங்கும்பரவியுள்ளது. 'Gramophone' என்னும் பேசும் யந்திரம் நிர்மித்து இந்திர ஜாலவித்தை செய்துவரும் மந்திரவாதி யிவரே. உலோகங்களையும், பொம்மைகளையும், மனிதர்களுக்குச் சரியாய்ப் பேசவும் பாடவும்செய்து மனிதனும் ஜீவன், ஈசுவரன் சூத்திரதாரியாக விருந்து ஆட்டிவைக்கும் சூத்திரப்பாவை யென்று சொல்வதற்கொப்ப, தானும் ஒரு ஈசுவரன்போல் சூத்திரப்ப்ாவைகள்செய்து அவைகளைப் பேசுவித்து பிரம்மபட்டத்துக்குப் போட்டிபோடுபவன்போல் விளங்கும் மகான் என்று பேர்பெற்றிருக்கிறார். விசுவாமித்திரர் திரிசங்குக்கென்று தனியாக ஒரு ஸ்வர்க்கம் நிர்மித்ததுபோல் எடிஸன் மனிதருக்குச் சமமென்று சொல்லத்தக்க சூத்திரப்பாவை கற்பித்து இன்னும் எத்தனையோ அற்புதங்கள் விளைவித்துவருகிறார்.

இப்படிப்பட்ட மகான் நல்ல குடியிற் பிறந்தும் குடும்பசொத்து நஷ்டப்பட்ட காரணத்தால், 14-வயதில் தனக்குத்தானே ஜீவனோபாயம் தேடிக்கொள்ளவேண்டி நேரிட்டது. நேரிடவும் பின்வாங்காது துணிந்துநின்று கைக்குக்கிடைத்த தொழிலில் ப்ரவேசித்து இவ்வாறு ஸ்வஜீவனம் செய்துவந்து அதில் விர்த்தியடைந்தபின் திடீரென்று அகஸ்மாத்தாக நேர்ந்த ஒரு ஆபத்தால் ஜீவனமிழந்து வேறு உபாயந் தேடவேண்டியவனாகவிருந்தான். இப்படி நூதன ஜீவனோபாயத்துக்கு வழிபார்த்துக் கொண்டிருக்கையில் ஒரு ஸ்டேஷன்-மாஸ்டருடைய பெண்குழந்தையொன்று ரயில் வந்துகொண்டிருக்கையில் தண்டவாளத்திடையே விளையாடிக்கொண்டுபோய்விட்டது. ரயிலெஞ்சினோ அதிவேகமாய் வந்துகொண்டிருக்கிறது. இன்னும் ஒரே நிமிஷம்! ஓடியாடி விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தை ரயில் வண்டியின் கீழகப்பட்டு துவையலாகப்போய் விடும். இந்த ஆபத்தைக்கண்டு எல்லாரும் திகைத்தார்கள். எடிஸன் என்னும் வாலிபனோ இதைக்கண்ட க்ஷணமே, ஒரு தாவல்தாவி கெருடன் மீனைக் கவர்ந்து செல்வதுபோல் குழந்தையைக் கையில் வாரிக்கொண்டோடி தண்டவாளத்துக் கப்பால் குதித்து அக்குழந்தையைக் காப்பாற்றினான். இதைக்கண்ட ஸ்டேஷன்மாஸ்டர் மனமுருகி அவனுக்குப் பணத்தாலுதவிசெய்யக் கூடாதவனாயிருந்ததால் தந்தியடிக்கும் வித்தை கற்றுக்கொடுத்தார். இந்த வித்தையில் எடிஸன் மகாசமர்த்தனாகிப் பின்னால் மின்சாரவித்தையில் மிகத் தேர்ந்த விற்பன்னனானான். இப்படி பலதுறைகளிலிறங்கி ஜீவனோபாயநிமித்த முழைத்துவருகையில் ஒருமுறை ஒரு வியாபாரக் கம்பெனிக்குள் மாதம் 60-பவுன் சம்பளத்தில் ஒருவேலையிலமர்ந்தான். அந்த வேலையிலிருக்கையில் உண்டியல் பத்திரம் அச்சிடும் யந்திரமொன்று அதியற்புதமாக நிர்மித்து அதை 1000-பவுனுக்கு விற்க உத்தேசித்தான். அதைப்பார்த்த அவனுடைய எஜமான் வியாபாரக்கம்பெனியார் அவனுக்கு அந்த யந்திர நிர்மாண சுதந்தரத்துக்காக 8000-பவுன் அளித்தார்கள். எடிஸன் தான் எதிர்பார்க்காத இவ்வளவு பணம் அவர்கள் அளித்ததைப் பார்த்து பிரமித்து, இதில் ஏதோ சூதிருக்கிறதென்று தீர்மானித்து, எப்படியாகிறதோ பார்க்கலாமென்று விற்பனைப்பத்திரத்தில் கையெழுத்துப்போட்டு

விட்டு 8000-பவுனுக்குக் கொடுத்த ‘செக்கு’ என்னும் உண்டியலை யெடுத்துக்கொண்டு அதைமாற்ற பாங்கிக்குப் போனான். அங்கே பாங்கி கிளர்க்கு அதைப்பார்த்து என்னென்னவோசொல்ல ஒன்றும் புரியாமல் மதிமயங்கி தைரியமிழந்து பாங்கியின் படிக்கட்டில் மனமயர்ந்து சோர்ந்துபோய்உட்கார்ந்தான். இவன் ஆயுள்காலத்தில் இவன் மனமயர்ந்து சோர்ந்தது இதுதான் முதல்தடவை. பிறகு அந்த உண்டியலைக்கொண்டு தன்னுடைய கம்பெனி குமஸ்தா ஒருவரிடம் காட்ட அவர், சங்கதியை விசாரித்து, உண்டியல்பெருந்தொகைக்காக விருப்பதால் எடிஸன் இன்னாரென்று மூதரிக்க வேண்டுமென்று சொன்னதாகவும், எடிஸனுக்குக் காதுகேளாமையால் (இளமைப் பருவம்முதல் காது - ஊனமாகவேயிருந்ததென்று தெரிகிறது) தியங்கிப்போனாரென்றும் தெரிந்தது. பிறகு அவரே ஆளை மூதரிக்க, 8000-பவுனும் கிடைத்தது. இதை மூலதனமாகக்கொண்டு சொந்தத்தில்தான் நூதன யந்திரங்கள் முதலானது கற்பிப்பதைச் செய்விக்க ஒரு வேலைச்சாலை நிர்மித்துக்கொண்டார். இந்த வேலைச்சாலை இப்பொழுது மேல்மேலும் வளர்ந்து பெருகி இப்பொழுது தேனீக்கூண்டு போல் அதியற்புதமாய் விசுவகர்மா நிர்மித்த அற்புத ஆலயம்போல் விளங்கும் ஒரு பெரிய தொழிற்சாலையாக விருக்கிறது. அங்கே இப்பொழுது 68-வயதுள்ள எடிஸன் என்பவர் தினம் 20-மணிநேரம் ஓய்வொழிவின்றி மனதாலும் புத்தியாலும் திரிகரண பூர்வகமாயுழைத்து வருகிறார். அமெரிக்கா முழுமையிலும் இவரைவிடக் கஷ்டப்பட்டு வேலைசெய்வோர் வேறில்லை, மேற்றிசை நாகரிகம் இவர் ஒருவரது கற்பித சாமர்த்தியத்தால் எவ்வளவோ மாறியிருக்கிறது. இவரொருவரில்லாவிடின் இவ்வுலகமே இப்பொழுதுள்ளபடியிராது. நாகரிகத்திற்கு இவராலுண்டான உதவி அவ்வளவு பெரிதாய் மதிக்கற்பாலதாயிருக்கிறது! இவர் யந்திரதந்திரயந்திர வகைகளில் நூதனமாய்க் கண்டுபிடித்த கற்பிதப்பொருள்கள் அளவற்றன. அவைகளையெல்லாம் சொல்ல இங்கு சாத்தியமில்லை. ஆனால் இப்படி பஞ்சேந்திரியங்களில் ஒன்றாகிய செவியின் சக்தியிழந்தும் உலகமுழுதும் அற்புதமாக விளங்கும் அனேக நூதன கற்பிதங்களை நிர்மித்து, இவர் விசுவகர்மா அவதாரமோ, அல்லது பிரம்மாவாகவேயிருந்து பிரம்ம பட்டமிழந்து உலகில் வந்தவதரித்த அவதாரபுருஷனோவென்று அதிசயிக்கும்படியான இவர் வேலைசெய்யும் முறையும், வேலையிலாழ்ந்த சிந்தையுடையவராயிருக்கையில் இவருடைய மனோதத்துவ இயல்பும் மிகக் கவனிக்கத்தக்கது. சென்னையில் ஹைகோர்ட் ஜட்ஜியாயிருந்து 45-வருஷங்களுக்கு முன் பென்ஷன் பெற்றுக்கொண்டவரான காலஞ்சென்ற ஜஸ்டிஸ் இன்ஸ் அவர்களுக்குச் நாமெழுதிய ஒருகடிதத்தில் மேற்றிசையார் கண்டுபிடிக்கும் அதியற்புதமான நூதன உண்மைகளெல்லாம் தன்னைமறந்து, தன்மனது தான்சிந்திக்கும் பொருளோடு தத்துவத்திலொன்றுபட்டு லயித்தகாலத்தி லுதயமானவையே யன்றி வேறல்லவென்றும், யோகசாஸ்திரப்படி எல்லாவுண்மைகளும் உண்மையான எல்லா ஞானமும் ‘லயயோகம்’ என்னும் இந்த தத்துவ வழிபற்றியே பெறத்தக்கவையென்றும் எடுத்தெழுதி வற்புறுத்திக் காட்டினோம். அதற்கு உண்மையான உதாரணம் இவரிடத்தில்கிடைத்திருப்பதாயிருக்கிறது. இந்த உதாரணங்களில் சில பின்வருமாறு:—

(i) ஏதாகிலும் ஒரு தத்துவப் பொருளி னுண்மையை யுணர மனங்கவர்ந்து ஏகாக்கிராந்த சிந்தையரா யதிலுழைத்துவரும்பொழுது அவர்மனது அதற்கு லக்ஷியமான பொருளோடு கலந்து ஐக்கியப்பட்டுப் போவதால், மற்ற விஷயங்களைப்பற்றிய ஞாபகம் அவருக்கு கட்டோடு அற்றுப் போய்விடுகிறது. உதாரணம்:—ஒருதடவை “இரட்டைத்தந்திமுறை” (duplex telegraphy) விஷயமாய் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும்பொழுது மிஸ்டர் எடிஸன்

தான் கட்டவேண்டிய முனிசிபல் வரியைக் கட்ட மறந்துவிட்டார். அதன்மேல் அவருக்கு ஒரு ஸம்மன் வந்தது. அதில் அடுத்தநாள் இத்தனை மணிநேரத்திற்குள் வரிகட்டியாகாவிட்டால் 100-க்கு $12\frac{1}{2}$-விகிதம் அபராதம் செலுத்தவேண்டுமென்று நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருந்தது. மறுநாள் தான் செலுத்தவேண்டிய வரிப்பணத்தை யெடுத்துக்கொண்டு முனிசிபலாபீஸுக்குவந்தார். அங்கே பணம் வாங்குகிற ஷராபு கூட்டமிகுதியால் உடனே இவரிடத்தில் பணம் பெற்றுக் கொள்ள முடியாமலிருந்ததால், அங்கே மற்றவர்களோடு காத்திருந்தார். தன்னுடைய முறை வரும்வரையில் காத்திருக்கையில் இவருடைய மனசு இவர் சிந்தித்துக்கொண்டிருந்த (duplex telegraphy) விஷயத்தைப்பற்றிச் சிந்தனையிலாழ்ந்து ஏகாக்கிராந்தமாய்விட்டது. இவருடைய முறை வரவும் முனிசிபல் ஆபீஸர் இவரையண்டி அசக்கிக் குலுக்கி "ஏனப்பா, உன்பேர் என்ன! மணியாய்விடப்போகிறது, ஜாக்ரதை! உன்பேர்?" என்று கேட்டர்.

"எனக்குத் தெரியாது" என்று பதிலுரைத்தார் இவர். இன்னும் ஒரு வாரத்தில் உலகெலாம் வியந்து கொண்டாடும்படியான உண்மையைக் கண்டுபிடித்து வெளியிடவிருந்த இவரை சித்த சுவாதீனமில்லாத பித்தன் என்று ஒதுக்கிவிட்டார்கள். பிறகு இவருக்கு மனம் திரும்பி வியவகாரதசை யடைந்தபோது குறித்தகாலம் கழிந்துபோய்விட்டது. 100-க்கு $12\frac{1}{2}$ அபராதம் சேர்த்து வரியைக் கட்டவேண்டி நேரிட்டது. இவர் உண்டியல் யந்திரம் நூதனமாய் கற்பித்து நிர்மித்தகாலையில் இவருக்கு வயது 17. இவர் 400-விதமான கற்பித யந்திரங்கள், சூக்ஷ்மங்கள், சூஸ்திரங்கள் கண்டுபிடித்து அவைகளுக்கு சுதந்திர பாத்தியம் பெற்றிருக்கிறார். இவைகளன்றி சில்லரையாக இன்னும் எத்தனையோ ஆயிரக்கணக்கான கற்பிதங்கள் நிர்மித்திருக்கிறார். இவருடைய கற்பித நிர்மாணங்களுக்குச் சுதந்தரபாத்தியம்பெறக்கட்டவேண்டியஸ்டாம்புக் கட்டணம்மட்டும் வருஷத்தில் சராசரி 150-பவுனாகிறது. 17-வது வயதுமுதல் 50-வது வயதிற்குள் இதற்காக 5000 பவுன் செலுத்தியிருக்கிறார். இவர் ஒருதுறையில் தான் இறங்கி யுழைத்தார் என்பதில்லை. சமையல் அடுப்புமுதல் பார்லிமெந்து சபைக்கு வேண்டிய கருவிகள் வரையில் கண்டுபிடித்திருக்கிறார். செல்லரிக்கும் பாச்சைகளைக் கொல்வதற்கான மின்சாரயந்திர முதல் பார்லிமெந்து சபையில் வோட்டுகள் கணக்கெடுக்கும் மின்சார யந்திரம் வரையில் எத்தனையோ விதம்விதமான சூஸ்திரங்களும் சூக்ஷ்மயந்திரங்களும் கண்டுபிடித்து நிர்மித்திருக்கிறார். இவர் நிர்மித்த இன்னொரு யந்திரம் 8-அடி தூரத்துக்கப்பாலிருந்து மனுஷ தேகத்தின் உஷ்ணத்தை உள்ளபடி குறித்துக்காட்டுகிறது. இவர் நிர்மித்த இன்னொரு யந்திரம் ஆடு புல்மேயும்பொழுது புல்கடிக்கும் சப்தம் 6-மைல் தூரத்துக்கப்பால் கேட்கும்படி செய்வதாயிருக்கிறது.

இவர் 'பேசும்'யந்திரம் கண்டுபிடித்தவகை மிகவும் அற்புதமானது. ஒரு சமயம் பேசுந்தந்தியின் பேசுந் துவாரத்தில் (Mouth piece of a telephone) இவர் பாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அதிலுள்ள அதிநயமான எஃகு முள் (Fine steel point) அவர் விரலில் குத்தியது. இதிலிருந்து அவர் யோஜனை செய்யத் துவக்கினார். "இந்த முள் அசையும் விதத்தைக் குறித்துக்கொண்டு அதேவிதமாக அதை நான் மறுபடியும் அசையச்செய்யக் கூடுமானால் அது ஏன் பேசக்கூடாதோ தெரியவில்லை! ஆகையால் அதைப் பரீக்ஷித்துப் பார்ப்பேன்" என்று பரீக்ஷைசெய்ய ஆரம்பித்தார். ஒரு தந்தித்தபால் காகிதத்தில் அந்த முள்ளின் அசைவுபடும்படி யமைத்து "Halloa" என்கிற சப்தத்தை உறத்துப்பேசினார். பிறகு அந்தக் காகிதத்தைப் பின்வாங்கி முன்போல் அந்த முள் அசையும்படி செய்தார், அந்த யந்திரத்திலிருந்து "Halloa, halloa" என்கிற சப்தம் அதி மிருதுவாக

வந்தது. இதிலிருந்து பேசும் யந்திரம் ஒன்று செய்யவேண்டுமென்று தீர்மானித்தார். இந்த எண்ணம் உதிக்கவும் இதை நிறைவேற்றுவதில் அவர் சிந்தை முழுவதுங் கவிந்துநின்றது. எத்தனையோநாள் இராத்தூக்கம் பகல்தூக்கமின்றி இதில் சிந்தைகவிழ்ந்துழைத்தார். அவர் இதற்கென்று புதிதாய் நிர்மித்த ஒரு யந்திரத்தில் "Spezia" என்கிற வார்த்தையைத் திருப்பித்திருப்பிச்சொல்ல அது ஒவ்வொருமுறையும் "Pezia" என்று சொல்லியது. முதலெழுத்தின் சப்தம் விட்டுப்போய் விட்டது. 6-மாதம் தினம் 15-மணி நேரம் இந்த பிசகைத்திருத்த ஊக்கமுடன் விடாமுயற்சி செய்துழைத்தார். கடைசியில் அவர் பொறுமையும் விடாமுயற்சியும் பலித்தது: "Spezia" என்கிற ஸப்தம் சரியாகவந்தது. இப்படியாக ஒவ்வொரு எழுத்துக்களும் அக்ஷர ஸப்தங்களும் அந்த யந்திரம் சரியாக உச்சரிக்கும்படிசெய்ய அனேககாலம் தினம் பல மணி நேரம் பாடுபட்டுழைத்தார். கடைசியில் காரியசித்தியடைந்து லண்டனிலுள்ள பளிங்குமாளிகையில் கூடிய ராஜசபையார் 4000-மைலுக்கப்பாலுள்ள எடிஸன் குரலை ஒரு யந்திரத்தில் கேட்டதிசயித்தார்கள். இப்பொழுது இந்த யந்திரம் கடைத்தெருவில் உத்ஸவகாலங்களில் ஓரணா காசுக்கு உலகிலுள்ள ஸங்கீதஸாஹித்திய மஹான்களுடைய பாட்டுகளையும், அரசர்கள் இராஜதந்திரிகள் முதலானோருடைய பேச்சுகளையும் பாடியும் பேசியும் காட்டி, சாமான்ய ஜனங்களையும் மகிழ்விக்கிறது.

மிஸ்டர் எடிஸன் ஒன்றுக்கு ஆதாரம் கண்டுபிடித்து அஸ்திபாரம்போட்டுவிட்டால் அப்புறம் அதை முடியாதென்று விடுகிறதில்லை. 20-வருஷங்களுக்குமுன் பார்லிமெண்டுசபைக் கமிட்டியார் தீர விசாரித்து மின்சார வெளியைப் பிரிக்கமுடியாது என்று தீர்மானித்தார்கள். பின்னுமொருவருஷத்திற் கெல்லாம் மிஸ்டர் எடிஸன் அதைப் பிரித்துக்காட்ட ஒரு சூக்ஷ்மயந்திரமேற்படுத்தி காரியத்தில் அப்படியேசெய்து காட்டிவிட்டார்.

மிஸ்டர் எடிஸன் ஒரு காரியத்தைச்செய்ய ஸங்கற்பித்துக்கொண்டுவிட்டால், அதில் என்ன செலவு நேர்ந்தாலும் சரி, என்னகஷ்டம் நேர்ந்தாலும் சரி, பின்வாங்குவதில்லை, ஒரு முறை ஏதோ ஒரு அபூர்வமான நார் வேண்டியிருக்கிறதென்று அதற்காகத் தகுந்தவர் ஒருவரை இவ்வுலகமுழுவதும் சென்று தேடி அப்படியும் அதைக்கொண்டுவரும்படி செய்யவேண்டு மென்று தீர்மானித்தார். தகுந்த மனுஷன் ஒருவர் அகப்படவே அவருக்கு வேண்டிய செலவைக்கொடுத்து உடனே பிரயாணப்படும்படி யனுப்பினர். 12-மாசம் அலைந்து திரிந்து அந்தநார் தேடப்போனவர் திரும்பிவந்தார். "அந்த நார் அகப்படாதா?" என்று மிஸ்டர் எடிஸன் கேட்டுவிட்டு பதில் கூறுவதைக்கேட்க நிற்காமல் போய்விட்டார். அவர் அந்த நார் தேடிக்கொண்டு போயிருந்த காலத்தில் அந்த ஜாலவித்தைக்காரர் அதற்கு பதிலாக ஒன்றைக் கண்டு பிடித்துக் காரியத்தை முடித்துவிட்டாரென்று இன்னொருவர் அவருக்கு விவரந்தெரிவித்தார். அவ்வளவு சூக்ஷ்மபுத்தியும் சுறுசுறுப்புமுள்ளவர் அவர்.

மிஸ்டர் எடிஸன், பணம், பேர், புகழ், கீர்த்தி இவைகளில் குறைவின்றி உலகப்பிரசித்தராய் விளங்கினாலும், அவர் நடத்தையில் மிகவும் அடக்கமுள்ளவர். ஆர்ப்பாடங்களும் ஆடம்பரங்களும் அவரிடத்தில் சுத்தமாகக் கிடையாது. மகாகீர்த்திமானாகியும், தான் ஆதியில் ஏழைப்பையனாயிருந்து சமாசாரப்பத்திரிகை விற்று கஷ்டஜீவனம் செய்ததை ஒருபோதும் மறக்காது நினைத்துவருகிறார். நியூயார்க் நகருக்கருகில் க்ளென்மான்ட் (Glenmont) என்னும் அவருடைய வாசஸ்தலம் மிக நேர்த்தியானதாயினும் அங்கு அவர் அதிகமாய் வசிப்பதில்லை. வேலைச்சாலையிலேயேயிருந்து வேலைசெய்வதிலேயே தம் காலத்தைப் போக்கிவருகிறார். அவர் இருமுறை விவாகம் செய்துகொண்டார். உலகத்துக்கு அவரைப்போல் உபகாரம் செய்தவர் வேறு யாருமில்லை. ஆயினும் அவர் பூர்வகாலத்து இருஷிகளைப்போல கர்மயோகியாய் அவருடைய வேலையாச்சிரமத்திலே வசித்துவருகிறார். அவரைப்போலொத்த மகான்கள் உலகத்துக்குபகாரிகளாக அவதரித்து ஜனங்களுடைய க்ஷேமவிர்த்தியைநாடி யுழைப்பதே நோன்பாகக் கொண்டு உண்மையான கர்மயோகத்திலிருந்து காலந்தள்ளி தங்களுடைய அவதாரமகிமையினால் உலகத்தை முன்னிலுமதிகமாக விர்த்தியடையச்செய்து பூஜிதர்களாகப்போகிறார்கள். இவர்கள் புண்யாத்மாக்களே யென்பதிற் சந்தேகமில்லை.

## "WAR AND SELF-DENIAL."

"The one great question which engrosses the attention of public men and politicians of the Empire, is how best to meet the growing war expenditure. . . The Officers of Government everywhere are preaching economy and the following table of the salaries of the chief officers in different countries should prove to be very instructive," says a contemporary.

### யுத்தச்செலவும் செலவொடுக்கமும்.

ஆங்கிலேய முதல் மந்திரி சம்பளம் வருஷத்துக்கு ரூபா 75-ஆயிரம். அமெரிக்கா யூனைடெட்ஸ்டேட்ஸ் ப்ரெஸிடெண்டு, லக்ஷத்து 50-ஆயிரம். இந்தியா இராஜப்பிரதிநிதி—2-லக்ஷத்து 50-ஆயிரத்து 800. பம்பாய், வங்காளம், சென்னை கவர்னர்கள், (தலைக்கு) லக்ஷத்து 20-ஆயிரம். லெப்டினென்ட கவர்னர்கள், (தலைக்கு) ஒரு லக்ஷம். இராஜப்பிரதிநிதி மந்திராலோசனை சபை மெம்பர்கள் (தலைக்கு) 80-ஆயிரம். பிரிடிஷ் மந்திராலோசனை சபை மந்திரிசள் (தலைக்கு) 42-ஆயிரம். மத்தியமாகாணங்கள், அஸ்ஸாம் சீப்கமிஷனர்சள் (தலைக்கு) 62-ஆயிரம், கனடா கவர்னர்-ஜெனரல், லக்ஷத்து 50-ஆயிரம். கனடா முதல் மந்திரி, 37-ஆயிரத்து-500. தென் ஆஸ்திரேலியா கவர்னர்-ஜெனரல், லக்ஷத்து 80-ஆயிரம். ஆபிரிகா கவர்னர்-ஜெனரல், லக்ஷத்து 50-ஆயிரம். தென் ஆபிரிகா முதல் மந்திரி, 60-ஆயிரம்.

இங்கிலாந்தில் ஸிவில் ஸெர்விஸ் உத்யோகஸ்தர்களுடைய சம்பளம் உயர்ந்தது வருஷத்துக்கு 15-ஆயிரம்.

இலங்கையில் ஸிவில்ஸெர்விஸ் உத்யோகஸ்தர்களுடைய உயர்ந்த சம்பளம் மாசம் 1-க்கு 2000 ரூபா தான்.

மிஸ்டர் ஹார்ட்லி உவிதர்ஸ் என்பவர் யுத்தச்செலவுக்காகச் செட்டுச் செய்து பணம் மிகுக்கும் வழியைக்காட்டவென்று சீமையில் சர்க்காருக்கு உதவியாகவுழைத்து வருகிறார். ஏழைகள் செய்யும் செட்டில் பணம் அதிகமாய் மிகுக்கப்படுவது சாத்தியமாயில்லை. ஆதலால் உயர்ந்த சம்பளம் வாங்கும் மந்திரிகள் உத்யோகஸ்தர்கள் முதலானவர்கள் தங்கள் சம்பளத்தில் ஒருபாகத்தை விட்டுக்கொடுத்தால் மெத்த சாதகமாயிருக்குமென்று பிரஸ்தாபித்து வருகிறார்கள். ஏற்கனவே இந்தியா கௌன்ஸிலில் மெம்பராயிருந்த ஒருவர் அங்கே அவருக்கு வேலையதிகமாயில்லை யென்று சம்பளத்தை விட்டுக்கொடுத்துவிட்டு சண்டைமுகம் போயிருக்கிறார். மிஸ்டர் சர்ச்சில் மந்திரிவேலையை ராஜிநாமா கொடுத்துவிட்டு சண்டைமுகம் போயிருக்கிறார். எப்படியும் இந்த யுத்தத்தில் ஜயிக்காமல் விடுகிறதில்லை, என்கிற உறுதியிருக்கிறமட்டும் பயமில்லை,

## THE MADRAS EXHIBITION OF INDUSTRIES AND AGRICULTURE, 1915-1916.

### சென்னைக் கைத்தொழில் வியவசாயக் காக்ஷி 1915-1916.

சென்னையில் வருஷந்தோறும் 'பீப்பிள்ஸ் பார்க்'என்று சொல்லும் தோட்டத்தில் கிறிஸ்த்மஸ் பண்டிகை காலத்தில் உத்ஸவக் கடைகள் வைத்து வேடிக்கை விநோதக்காட்சிகளும் விளையாட்டுகளும் நடத்துவதுண்டு. இந்த வருஷம் இப்பொழுது நடந்து வரும் பாரதப்போர்ச் செலவுக்காகப் பணம் சேகரிக்க உதவியாக விருக்கட்டுமென்று மேற்படி உத்ஸவக்காட்சி விநோதங்களை நடத்தும் ஏற்பாடு கனம் பொருந்திய கவர்னரவர்கள் ஆதரவில் நடத்தப்பட விடப்பட்டது. அவரும் இவ்விஷயத்தில் மனஞ்செலுத்தி "தென்னிந்தியா ஆத்லெடிக் அஸ்ஸோஸியேஷனைச் சேர்ந்த விளையாட்டுத் தொண்டியில் வழக்கம் போல் நடத்தப்படும் உத்ஸவக்கடைகளும் அச்சபையாரின் கட்டடத்துக்கு வடக்கேயுள்ள விஸ்தீர்ணமான வெளியில் சென்னைக் கைத்தொழில் வியவசாயக்காட்சி சாலையும் ஏற்படுத்தத் தீர்மானித்தார். இது டிசெம்பர்மீ 27உ முதல் ஜனவரிமீ 16உ வரையில் கண்காட்சிக்கு சௌகரியமாக விருக்கும்படி திறந்துவைக்கப்பட்டிருந்தது. இப்படிப்பட்ட பொதுக்காட்சிகள் வைக்கிறது ஜனங்கள் அறிவு விர்த்திக்காகமட்டுமன்றி கைத்தொழில் வியாபாரம் விர்த்தியாவதற்கும் இது ஓர் முக்கியசாதனமாம். இந்தக்காட்சிக்குச் சென்னையிலுள்ள ஷாப்புக்காரர்கள் சிலரும் நெசவு முதலான கைத்தொழில் யந்திரம் விற்பவர்களும்சர்க்கார் கைத்தொழில் விசாரணைத் தலைவரும், வியவசாய இலாகா,காட்டிலாகாத் தலைவர்களும் மீன் இலாகாத்தலைவரும் ஆங்கிலேய புஸ்தக வியாபாரிகளில் லாங்மான்ஸ் க்ரீன் கம்பெனியும் மாக்மிலன் கம்பெனியும் காட்சிப்பொருள்கள்

சேகரம் செய்து காரியத்தை நடத்தினார்கள். எல்லாம் ஸர்க்கார் இலாகாத்தலைவர்களுடைய மேன்பார்வையில் நடந்ததனால் சிறப்பாகவே யிருந்தது. நீலகிரியிலிருந்து காபி, தேயிலை, ரப்பர் தோட்டக்காரர்கள் அந்த சரக்குகள் அனுப்பி யிருந்ததன்றி கொயினா (Quinine) சுவரப்பட்டை சம்பந்தமான பலவித சரக்குகளும் காட்சிக்கு வந்திருந்தன. திருவனந்தபுரம், கொச்சி சமஸ்தானத்திலிருந்தும் காட்சிப் பொருள்கள் வந்திருந்தன. ஒவ்வொரு இலாகாதாரரும் அவர்களாலியன்றமட்டும் சிரத்தையெடுத்துக்கொண்டு கண்காட்சி சிறக்கச் செய்தார்களாயினும் வியவசாய இலாகாத் தலைவர் மிஸ்டர் சாட்விக் எடுத்துக்கொண்ட முயற்சி மிகவும் கொண்டாடத் தக்கதாயிருந்தது. அந்தக்காட்சிசாலை பொட்டை வெளியாய்க் கிடந்த விடத்தில் ஏற்பட்டதாயினும் சென்னை கவர்ன்மெண்டுக்கு 'கன்ஸல்டிங் ஆர்கிடெக்ட்' ஆகிய சிற்பாலோசனை சொல்லும் ஸர்க்கார் இஞ்சினீர் மிஸ்டர் தாமஸ் என்பவர் அவருடைய புத்தி நுட்பத்தாலு சிற்பசாஸ்திர ஞானத்தாலும் அந்தப் பொட்டைவெளியை ஒரு கந்தர்வ நகரம் போல் மாற்றிவிட்டார். அந்த அற்புதங்களை வர்ணிக்க, அவற்றை அவகாசமாய்ப் பார்த்து நிதானித்து எழுதவேண்டும். கண்காட்சிக் கமிட்டியார் அதற்கு வேண்டிய அனுகூலங்கள் அளித்திருக்கவேண்டும்: அது இல்லாக்குறைவினால் அக்கடமையை நாம் நேரில் வகித்துச் செலுத்துவது சாத்தியமாயில்லை. ஆதலால் இக்காட்சியில் பிரதமஸ்தராயிருந்தவர்களுடைய அனுகூல சாதனங்களோடு வியவசாய ஞானமும் கூடிய கிருஷிகன் பத்திராசிரியர் இதைப்பற்றி எழுதியிருப்பதைச் சுருக்கிக்கீழே ப்ரசுரிக்கிறோம். அவர் வியவசாயக் காட்சியை நடத்துவதில் சம்பந்தப்பட்டவராயு மிருந்ததுபற்றி அவருடைய விருத்தாந்தம் கவனிக்கத்தக்கதாயிருக்கு மென்று எண்ணுகிறோம்.

சென்னை விவசாயக்காக்ஷி.

இந்த டிபார்ட்மெண்டிற்குள் புகுந்ததும் முதல் அறையில் விவசாய வ்சாரணைஸ்தலம் அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் ஓர் விவசாய உத்தியோகஸ்தர் இருந்துகொண்டு ஜனங்கள் கேட்கும் கேள்விகளுக்கு ஜவாபு சொல்லிக்கொண்டும், விவசாய டிபார்ட்மெண்டாரால் பிரசுரிக்கப்பட்ட பல துண்டுப்பத்திரிகைகளையும் பழைய விவசாயங்களையும் கேட்போருக்கு இமைாய்க் கொடுத்து வருகிறார். மேலும் ஆங்கிலேய பாஷையிலுள்ள "Facts and Figures of Agriculture" என்னும் புஸ்தகத்தையும், "South Indian Insects" என்னும் புஸ்தகத்தையும் முறையே 14-அணுவுக்கும், 6-ரூபாய்க்கும் விற்றுவருகிறார். அதற்கு எதிரில் அதே அறையில் கோழிமுட்டைகளை கோழி அடைகாக்காமலே யந்திரத்தின் மூலமாய் குஞ்சு பொறிக்கவைக்கும் யந்திரமும் பொறித்த குஞ்சுகள் எந்தவிதமான தீனிகள் கொடுத்து வளர்க்கவேண்டுமென்றும், பொதுவாகக் கோழிகளை நல்ல ஸ்திதியில் வளர்ப்பதற்கு வேண்டிய சாதனங்களெல்லாமும் மிஸ்டர் புல்மோர்துரை யவர்களால் வைக்கப்பட்டிருந்தது. அவருடைய வெள்ளை ஆர்பிங்க்டன் என்னும் ஜாதிக்கோழிகளில் பல காக்ஷி கட்டடத்துக்கு வெளியில் இரும்பு வலைகளமைக்கப்பட்ட இடத்தில் விடப்பட்டிருந்தன. மேலும் கோழிகளை வளர்ப்பதெப்படி என்னும் அவருடைய புஸ்தகமானது ஆங்கிலத்தில் காக்ஷி சாலையில் வைத்து விற்கப்பட்டது.

இதற்கு அடுத்த அரையில் பலவிதமான ரப்பர்கள், பலவிதமான காப்பிக்கொட்டைகள், தேயிலைகள், ஜாதிபத்திரி, கிராம்பு, ஏலக்காய் முதலியன தென் இந்தியாவிலுள்ள காபி தேயிலை முதலிய பயிர் செய்வோரின் கூட்டுச் சங்கத்தாரால் (United Planters' Association of Southern India) வைக்கப்பட்டிருந்தது. அதன் அங்கத்தினர்களுக்கு பாபா[illegible]புருடின்னிலும், வட மைசூரிலும், தென் மைசூரி

லும், குடகிலும், வயநாட்டிலும் நீலகிரியிலும், சேர்வராய்மலையிலும், மலையாளத்திலும், ஆனை மலையிலும், கானன் டேவன் எஸ்ட்டேட்டுகளி லும், மண்டகாயம், மத்திய திருவநந்தபுரம், தென் திருவநந்தபுரத்திலும் பல காப்பி தேயி லைத் தோட்டங்களிருக்கின்றன. அவர்கள் தாங்கள் பயிரிடும் சரக்குகளில் சிலாக்யமான காபி, தேயிலை, ரப்பர் முதலியவைகளை அனுப் பியிருக்கிறார்கள். இதைத்தவிர மீயர்ஸ், லெ ஸ்லி அண்ட் கம்பெனியும் அவர்களால் பயிர் செய்யப்படும் ஷ சரக்குகளை அனுப்பியிருக் கிறார்கள். தேயிலைச் செடிகளும் பார்வைக்காக வைக்கப்பட்டிருந்தன.

மூன்றாவது இடத்தில் நெல் தினுசுகளும் அவைகளைப்பற்றிய விவரங்களோடு வைக்கப் பட்டிருந்தன.

இதன் சமீபத்தில் சின்கோனா என்னும் செடியின் விதை முதல் (காய்ச்சல்) ஜுரத் திற்கு உபயோகிக்கும் கொய்னா பொடிசெய் யும் விதம் வரையில் ஏற்பட்ட பல மாறுபாடு களைக் காண்பித்திருக்கிறார்கள். ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு, குண்டூர் புகையிலை முத லியவையும் இதன் பக்கத்தில் வைக்கப்பட் டிருந்தன. இந்த இடத்திலிருந்து வெளியே போய்த்தான் மற்ற விவசாயப் பொருட்களைப் பார்க்கவேண்டியிருந்தது. அப்படி வெளியே போகும் பொழுது கட்டடத்திற்கு வெளியில் தினுசுப்பயிர்கள் செய்யப்பட்டு நிலைப்பயிரா யிருந்தன.

இதைப்பார்த்தபின் மறுபடியும் விவசாயக் காட்சி சாலைக்குள் மற்றொரு வாசலின் வழி யாய்போனால் கவர்ன்மெண்ட் பூஞ்சாண நோய் சாஸ்திரியார் (Mycologist) செய்யும் வேலை ஸ்தாபிக்கப்பட்டிருந்தது.

அடுத்த அறையின் ஒரு பக்கத்தில் தாவர சாஸ்திரியார் மனிதர் மூச்சுவிடுவதைப்போல் செடிகளும் மூச்சுவிடுகின்றன என்பதை நிரூ பித்துக் காட்டினார். எப்படியென்னில் ஒரு கண் ணாடிக் குப்பியின் அடிப்பக்கத்தில் சேப்பங் கிழங்கின் இலையை காற்றுப்புகாதபடி கெட்டி யாய் வைத்து அப்புட்டியில் தண்ணீர் வார்த்து கார்க்போட்டு மூடினால் இந்த இலையானது மூச்சுவிட்டதும் ஒரு மனிதன் தண்ணீருக்குள் முழுகி மூச்சுவிட்டால் எப்படி தண்ணீரில் கொப்புளங்கள் கிளம்புமோ அப்படியே இந்த இலை சுவாசிப்பதாலும் கொப்பளங்கள் கிளம்புகின்றன. இது எப்படி மூச்சுவிடுமென் றால் இலையிலிருக்கும் கண்ணுக்குத் தெரியாத அநேகமாயிரம் துவாரங்களின் வழியாய் காற் றை இலையானது சுவாசித்து காம்பின் வழி யாய் விடுகிறது.

இதற்கு எதிரில் புழுப்பூச்சி சாஸ்திரி (Government Entomologist) விவசாயிகளு க்கு நன்மை தீமைகளை விளைவிக்கும் அநேக புழுப்பூச்சிகளை வைத்து இன்னின்ன புழுக்கள் நன்மை செய்பவையென்றும் இன்னின்ன புழுக்கள் தீமை செய்பவையென்றும் வரு பவர்களுக்கெல்லாம் காட்டி வந்தார். அடுத்த அறையில் 14-தினுசு பணிலாக்கொட்டை களும் அவைகளைப் பயிரிடும் விதமும் காட்டப் பட்டிருந்தது.

அதற்கு எதிரில் 7-குதிரைச்சக்தியுடைய எண்ணெய் இயந்திரத்தால் ஓட்டப்பட்ட கரு ம்பு ஆலை மாவி கம்பெனியாரால் ஸ்தாபிக்கப் பட்டிருந்தது. இதற்கு எதிரில் வேர்க்கடலை யை உடைக்கும் இயந்திரமும் அதனால் உடை ப்பதின் பலனும் மாமூலாய் உடைக்கும் மாதி ரியும் காட்டப்பட்டிருந்தது. அடுத்தாற்போல் சர்க்கார் பண்ணைகளிலிருந்து கொண்டுவர பட்ட 22-தினுசுக் கரும்புகள் அவைகளின் தனித் தனி பேர்களுடன் அடுக்கிவைக்கப்பட் டிருந்தன.

அதன் சமீபத்தில் கரும்பின் விதைகள் (கரும்புத்துண்டுகளல்ல. கரும்புக் கதிரிலிரு ந்து எடுத்த விதைகள்) வைக்கப்பட்டிருந்த தோடு அவ்விதைகள் போட்டு முளைத்த சிறு நாற்றுகளும், அதற்குமேல், சற்று வளர்ந்த நாற்றுகளும் வைக்கப்பட்டிருந்தன. அதன்

சமீபத்தில் வெல்லம், நாட்டுச் சர்க்கரை, பனை வெல்லம், கற்கண்டு முதலியனவும், கருப்பஞ் சாற்றிலிருந்து சென்னையில் செய்த பெப்பர் மெண்டுகளும், பலவிதமான நார்களும், அந்நார்களால் செய்யப்பட்ட கயிறுகளும், கம்போடி பருத்திக்காய்கள், பருத்திநூல் முதலியனவும் காட்டப்பட்டிருந்தன.

பருத்தி, வேர்க்கடலை முதலியவைகளை தரகர்கள் மூலமாய் விற்பதினால் விவசாயிகளுக்கு அதிக நஷ்டமுண்டாகிறதென்றும், அதைவிட கூட்டுறவுச் சங்கங்களால் நேரே பெருத்த வியாபாரியுடன் வியாபாரம் செய்வதால் அதிக இலாபம் அடையலாமென்றும் காண்பிப்பதற்காகத் தக்க பொம்மைகள் செய்து வைத்து காட்டியிருந்தார்கள். இதைத் தாண்டியதும் சலவைக்கற்களால் கட்டப்பட்ட பச்சைப்பாலிலிருந்து இயந்திரசகாயத்தால் ஆடையெடுத்து அவ்வாடையிலிருந்து கொஞ்சம்கூட கைதொடாமல் வெண்ணெயெடுக்கும் விவரங்களெல்லாம் காண்பிக்கப்பட்டது. அதைப்பார்த்து அடுத்த வாசலின் வழியாய் வெளியிற் சென்றதும் இரண்டு பக்கங்களிலும் பட்டுப்பூச்சி முட்டைகள் முதல் பட்டெடுத்துத் துணி செய்யும் வரையில் விவரமாய் எடுத்துக்காட்டினார்கள். அங்கு வந்திருந்த பட்டுப் பூச்சிவளர்ப்பவர்கள் கேட்பவர்களுக்கு தக்கபடி விடையளித்துக் கொண்டிருந்தார்கள். இதற்கடுத்தாப்போல் பெரியகலப்பை, மட்டக்கலப்பை முதலிய பல உபயோகமான விவசாயக்கருவிகள் வைத்திருந்ததோடு அங்கு விவசாய இலாகாதார் ஒருவர் இருந்துக்கொண்டு அவைகளின் விவரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

## LABOUR AS AN AGENT OF PRODUCTION.

### A LESSON IN POLITICAL ECONOMY.

### உத்யமம் அல்லது உழைப்பு:

தனோத்பத்தி சாதனம்.

தனோத்பத்திக்கு வேண்டிய ஸாதனங்களில் உத்யமம் அல்லது உழைப்பு என்பது ஒன்று. ஆயினும் சிலதூரம் வரையில் மனிதனது பிராகிருதங்களான காம்யங்கள் ஸுலபமாக இயற்கைப் பொருள்களாலேயே தீர்க்கப்படுகின்றன. மனிதன் காட்டில் ஸஞ்சரித்துக்கொண்டு, குரங்குகள்போல காய்கனிகளை யுண்டு புரண்டுகொண்டிருந்த காலத்தில், செடி கொடிகளிலிருந்து இயற்கையாயுண்டாகும் பல வருக்கங்களைக்கொண்டு ஜீவனைத் தரித்துவந்திருக்க வேண்டியது. அல்லது மற்றைய கொடிய மிருகங்களைப்போலத் தாழ்ந்த ஜீவன்களை வதைத்துப் புசித்தாவது வாழ்ந்திருக்கவேண்டியது. இந்நிலைமையில் இருக்கும் காலத்தில் மனிதனுக்கு மனிதன் என்ற பெயரே தகாது. மிருகத்துடன் மிருகமாய்த்தான் ஓடி யாடிக்கொண்டு யாதொரு தேசஸ்ஸம்குணமும் இல்லாமல் இருந்திருக்க வேண்டியது. இப்படியிருப்பாருக்குத்தான் நம் முன்னோர்கள் கிராதர்கள் என்றும் வியாதர்கள் என்றும் பெயரிட்டிருந்தார்கள். அவர்களது கும்பல்கள் விந்தியமலையைச் சார்ந்த கானங்களில் நெடுநாள் வரையில் இருந்ததாக நம் முன்னோர் நமக்கீந்திருக்கும் காவ்யங்களில் காண்கிறோம். இப்படியாகி உழைப்பின்றி ஜீவிக்கிற வரையில் மனிதன் செல்வம் என்பதை யறிவதேயில்லை. ஆகையால் இவனைப்பற்றிச் செல்வநூலுரைப்பது யாதொன்றுமில்லை.

முதல் முதல் உழைப்பு என்பது காணப்படுவது இடையர் கூட்டத்தில்தான் (Pastoral tribes). முன்கூறிய வேடர் நிலைமையினின்றும்(Hunter state) நாளாவட்டத்தில் தனது இயற்கையான மேல்நோக்கிற்கேற்ற மனிதன் அபிவிருத்தியடைந்து மிருகத்துடன் மிருகமா

யிராமலும், கையிற் கண்டதையெல்லாம் நிர்மூலம்செய்து காலாந்தகனாகத் திரியாமலும், தனக்கு நாளைக்கு வேண்டியதை யின்றைக்கே தேடிவைத்துக்கொள்ள ஆலோசனைசெய்யும் திறமையடைந்து, எப்போதும் நிரந்தரமாய் ஆகாராதிகள் கிடைக்க ஆடுமாடுகளைப் பிடித்துப் பழக்கிவைத்து, அவைகளை மேய்த்து, அவைகளுக்கு நோய்வந்தபோது தகுந்தபடி சிகித்ஸை செய்து, அவைகளைக்கொண்டு ஜீவனம்செய்யத் துவங்குகிறான். இப்படி யபிவிருத்தியடைந்த நிலைமைக்கு இடையர் தம் நிலைமையெனச் சரித்திரதத்வபோதிகள் (Historical Philosophers) பெயரிட்டிருக்கிறார்கள். இந்நிலைமையில் அதிகமாக உழைப்பு வேண்டியிருக்கிறது என்பது விசதமாக விளங்கக்கூடிய விஷயமே. இப்படி இடையர் நிலைமையையடைந்த ஜனஸங்கங்களில் நாம் இரண்டு முக்கியமான குணங்களைப் பார்க்கிறோம். காலாகாலத்தில் ஆகாராதிகள் கிடைப்பதாலும், குளிர் முதலிய பாதைகள் இல்லாமல் தங்களைக் காத்துக்கொள்ளக்கூடிய சக்தியும் அறிவும் ஜனங்களுக்கு இருப்பதாலும் இந்நிலைமையர் சீக்கிரம் ஸங்கையில் அதிகரிக்கின்றார்கள். ஆயினும் முன்னால் அலைந்து திரிந்து ஜீவனத்திற்குப் போதாமல் தடுமாறிக்கொண்டிருந்த பூமியின் பாதிபாகத்திற்குள்ளாகவே தங்களுக்கு வேண்டியதைச் சம்பாதித்துக்கொள்ளும் திறமையைப் பெறுகிறார்கள். முன்னால் வேடராயிருந்த காலத்தில் ஒருவேளைப் பசி தீர்க்கக் கொல்லப்பட்ட ஆடுமாடுகள் இப்போது பாதுகாக்கப்பட்டுப் பல வேலைகளுக்குதவிப் பாலும், தயிரும் கொடுக்கின்றன. இப்படியே ஒவ்வொரு விஷயத்திலும் முந்திய நிலைமையைக்காட்டிலும் இப்போது ஜனங்கள் அதிகமாக வுழைத்து வேண்டியபடி பொருள்களை யுண்டாக்கிக்கொள்கிறார்கள். இம்மாதிரி உண்டாக்கப்பட்ட பொருள்களைச் சரியானபடி வேண்டிய காலங்களில் உபயோகமாகும்படி காத்தும் வைக்கிறார்கள். ஆகையால் இந்நிலைமையில் க்ஷாமம் என்பது அதிகமாகப் பீடிக்கிறதில்லை.

இதற்கு அடுத்தநிலை வேளாண்மை. (Agricultural state). முன்னிருந்ததைக்காட்டிலும் பலமடங்கு நாகரிகம் அதிகரிக்க, மனிதன் பூமிகளை யுழுது மண்ணில் மழுங்கியிருக்கும் பிராகிருத சக்திகளை வெளிப்படுத்தி, முன்னால் தன்னைப்போல தானே விளைந்து புல்லாந்தரையாகக் கிடந்த விடங்களிலிருந்து, தன்நாவிற்கினியதான வுணவையும், தன் ஆடுமாடுகளுக்குப் பொதுமான தீவனங்களையும் சம்பாதிக்கிறான். முன்னால் ஒரு இல்லத்தாருக்கு பல வகரா பூமி வேண்டியிருந்தால் இப்போது சில வேபோதும் ஜனங்களும் வெகுவாய் ஸங்கையில் அதிகரிக்கிறார்கள். ஆகாரத்தம் அலையவேண்டியதில்லை. இருந்தவிட மிருந்து ஆகாரத்தைப் பூமியினின்றும் விளைவிக்கிறார்கள். அலைந்து திரியவேண்டிய கட்டாயம் போகவே இருக்க ஸ்திரமான வீடுகளைக்கட்டவாரம்பிக்கிறார்கள். வேண்டியவை யெல்லாம் எப்போதும் கையிலேயே கொண்டுபோகவேண்டிய ஆவசியகம் குறையவே, புதுவகையான ஆசைகளும் அவைகளைப் பூர்த்திசெய்ய புதுவகையான செல்வமும் உண்டாக்கப் படுகின்றன.

இதற்கடுத்த ஸ்திதிதான் நாமிப்போதடைந்திருக்கும் தொழிலாண்மை. (Industrial state). வேளாண்மையுடன் இராமல் கைத்தொழிலினால் வெவ்வேறு பொருள்களை யுண்டாக்கி யனுபவித்து வருகிறோம். இப்படியாக மனிதர் அபிவிருத்தி யடைந்து வந்திருக்கும் மார்க்கத்தைப்பற்றி ஆலோசித்துப் பார்த்தால் இந்நான்கு நிலைமைகள்வழியாகத்தான் என்று நன்றாகத்தோன்றும். ஆயினும் இந்நிலைமைகள் பரஸ்பர விருத்தங்களானவைகள் அல்ல. இப்போது கைத்தொழில் அபிவிருத்தி யடைந்திருக்கும் நமது காலத்திலேயே, வேடர்களும், இடையர்களும், வேளாளர்களும் இருக்கவேயிருக்கிறார்கள்: தங்கள் தங்கள் புராதன

மான விருத்தியை விடாமல் நடத்தியும் வருகிறார்கள். ஸாமானியமாக வொரு மனிதன் தனக்கு அநுகூலமான ஒரு பொருளை யொரு தடவை உண்டாக்கக் கற்றுக்கொண்டால் அதை அவன் ஒருபோதும் கைசோரவிட மாட்டான். வாழ்நாள் முழுதும் ஒவ்வொருவனும் பிரகிருதியுடன் விடாப்போர்புரியவேண்டி யிருப்பதால் இப்போரில் ஒருதடவை யடைந்த வெற்றியை யிழந்துவிட்டால் ஒருவித சௌக்கியமுமில்லை யாதலால் ஒரு நிலைமையில் அறிந்த விஷயமும் கற்ற கலையும் என்றைக்கும் பிரயோசனப்படுத்தப்படுகின்றன.

இப்படியாக எவ்வகைப்பட்ட நிலைமையிலும் உழைப்பு இருக்கவே யிருக்கிறது. உழைப்பால்தான் மூவகையரும் செல்வத்தை யுண்டு பண்ணுகிறார்கள். இப்படி யெங்கும் விளங்கும் உழைப்பின் சிறப்பானது (1) வேலைக்காரனது திறம் (2) உழைப்பின் விஷயமான கட்டுப்பாடுகள் (3) உழைப்பாளிகளின் தொகை ஆகிய இம்மூன்று காரணங்களைப்பற்றியதா யிருக்கிறது. இவைகளில் முதற்கூறிய காரணமான வேலைக்காரனது திறம் (The efficiency of the labourer) என்பதைப்பற்றி கொஞ்சம் விஸ்தாரமாய் இந்தப்பாடத்தில் வியவகரிப்போம்.

நன்றாக வேலைசெய்வதற்கு சரீர தாட்டியம் வேண்டியிருப்பதால் எவ்வளவுக்கெவ்வளவு வேலையாள் திடகாத்திரமுடையவனாகவிருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு வேலை சிறப்பாக நடக்கும். ஆகவே ஒரு இராச்சியத்தின் சீர்மைக்கு அதில் இருக்கும் செல்வம் காரணமாதலால், அச்செல்வத்தை யுத்பத்தி செய்விக்கும் வேலைக்காரர்களது தேகபோஷணையைச் சரியாக நடத்திவைப்பது இராஜாங்கத்தின் முக்கியமான கடமை. வேலையாட்களின் தேகதாட்டியத்திற்கு ஒரு பகுதி பிறப்புக்காரணமாயிருக்கிறது உண்மையே. தாய் தகப்பன்மார்களது சக்தியை யனுசரித்துத்தான் பிள்ளை பெண்களுக்கு சரீரபலம் வருகிறது. மேலும் பிறப்பைதொட்டுவந்த இந்த வித்தியாஸம் தேசத்தின் சீதோஷ்ண ஸ்திதி, ஜனங்களின் ஜாதி முதலியவைகளைப் பொருத்தும் வாய்க்கிறது. இப்படியாக இயற்கையாயுண்டாகும் காரணத்தைமாற்றுவதற்கு மனிதரால் ஆகாது. ஆனதினால் இதைப்பற்றி நாம் இங்குரைக்கவேண்டியது யாதுமில்லை.

ஆயினும் உழைப்பாளியின் திறத்தை யதிகரிக்க வொரு முக்கியமான காரணம் அவனுண்ணும் உணவு. அவனவன் உணவின் அளவையும் ஸாரத்தையும் பற்றித்தானிருக்கும் அவனவன் திறம். எப்படி புகைவண்டிக்கு விறகு போட்டால்தான் வண்டிகளை யிழுக்கும் திறம் வருகிறதோ, அப்படியே மனிதனுக்கும் வயிறுநிறைந்தால்தான் வேலை செய்யச் சக்தியுண்டாகும். ஆகாரவிஷயத்தில் மனிதன் ஒரு யந்திரம்போலத்தான். எப்படி விறகாகப் பரிணமித்திருக்கும் சூரிய சக்தி நெருப்பாகமாறி நீரைக்காய்ச்சி நீராவியால் வண்டிகளையிழுக்கும்படி யுதவுகிறதோ அப்படியே தான் காய் கனிகளாயும், தானியங்களாயும், அல்லது இரைச்சியாயும் இரத்தமாயும் நீராயும் காற்றாயும் பரிணமித்திருக்கும் பாஸ்கரனது சக்தியானது நம்முள் ஆகாரரூபமாய்ச்சென்று நாம் செய்யும் ஒவ்வொரு கருமத்திற்கும், நாமெண்ணும் ஒவ்வொரு எண்ணத்திற்கும், நாம்வேண்டும் ஒவ்வொரு ஆசைக்கும் காரணமாகிறது.

ஆகையால்தான் 'சூரியநமஸ்காரம்' என்கிற சூரியோபாசனை தேஹசுகத்துக்குக்காரணமாகிறது. ஆகாரமூலமாய் கிரஹிக்கும் சத்தை சூக்ஷ்மமாகவும் கிரஹிக்கலாம். இந்த கிராஹிய சக்தியைப்பெறுவதே சூரியோபாசனையின் பலனும். இந்த சூரியனை பிராமணர்கள் "நமஸ்ஸவித்ரே" யென்னும் மந்திரத்தால் திரிகாலமும் வந்தித்து வழிபடுகிறார்கள். ஸந்தியா வந்தனம் தெரியாதவர்களுக்கு இது புதுமையாகவிருக்கும். ஆனால் சாஸ்திரக்ஞர்கள் இதை வெகு சாதாரணமாகக்கையாடி வருகிறார்கள்.

ஆகாரவிஷயத்தைப்பற்றிப் பேசும்போது மனிதனும் ஒருயந்திரவிசேஷமென்று சொல்வதில் யாதொரு பிசகுமில்லை. இந்த திருச்சியமான லோகத்தில் உள்ள சக்தி 'அக்ஷயமானதாகையாலும்' நம்முள்காணும் ஸமஸ்தமும் இந்த அக்ஷயமான சக்தியின் பரிணதி

கள் தாமாகையாலும் சக்திக்கெல்லாம் அதிஷ்டானம் பாஸ்கரதேஜஸ்தானாகையாலும், நம்முடைய திறத்தை அதிகரிக்க அப்பாஸ்கர தேசஸின் பரிணதியான ஆகாரத்தை நாம் உட்கொள்ளவேண்டியது. ஆயினும் எவ்வளவுக்கெவ்வளவு நாம் ஆகாரத்தை அதிகரிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு திறம் சமமாக அதிகரிக்குமென்று எண்ணக்கூடாது. சில தூரம்வரையில்தான் ஆகாரம் அதிகரிக்கவதிகரிக்க வேலைத்திறமும் சமமாக வதிகரிக்கும். எப்படியெனில் 'ஒருவனுக்கு நாளொன்றுக்கு 10-பவுன் நிறையுள்ள ஆகாரம் வேண்டியிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். 100-அவுன்ஸ் அல்லது சற்றேறக்குறைய 6½-பவுன் அவன் சாப்பிட்டால்' வயிறு நிறையாமல், சக்திகுறைந்துபோய் ஊர்ந்துகொண்டுதான் வேலைக்குப் போகவேண்டும். 100-அவுன்ஸை 125 - அவுன்ஸாகக்கொடுத்தால், கால்பங்கு மாத்திரம்தான் அவனது வேலைத்திறம் அதிகரிக்கும் என்று எண்ணக்கூடாது. அரைவயிறு நிரப்பவும், சுறுசுறுப்புடன் வேலைசெய்யத் தொடங்குவான். 150-அவுன்ஸுக்கு ஆகாரம் உயர்ந்தால், சுகமாகப் பசிதீர்ந்து முன்னிலும் பலமுறை அதிகமாக வேலை நடக்கும். இப்படி யதிகரிக்கும் உணவிற்கு ஒரு எல்லையுண்டு. அதற்குமேல் போனால் அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாமென்கிறபடி விஷமாக உபத்திரவிக்கும். ஆகையால், வேண்டிய ஆகாரம் செல்லுகிறவரையில் ஆகாரத்தை லோபத்தனமாகக் குறைப்பது வேலைக்குக் கெடுதி உண்டாக்குகிறது. ஆகையால் ஒவ்வொரு இராசாங்கத்திலும் வேலை செய்கிறவர்களுக்கு தகுந்த ஆகாரம் கிடைக்கும்படி ஏற்பாடுகள் செய்யப்படவேண்டியது. உயிருடன் வாழ்வதற்கு வேண்டிய ஆகாரத்துடன் கொஞ்சம் கூட்டினால் போதும்; சுகஜீவனத்திற்கு வேண்டிய பாகம் வந்துவிடுகிறது. சந்தைக்குக் கொண்டுபோகவைத்துக் காப்பாற்றும் ஆடுமாடுகளுக்குமன்றோ வேண்டியபடி ஆகாரம் போடுகிறோம். அது குறைந்தால் இளைத்துப்போகுமென்று பயப்படுகிறோம். மனிதன் விஷயத்தில் மாத்திரம் ஏன் இப்படி நிஷ்கருணையுடையவர்களாயிருக்கிறோம் என்பதை நன்றாக யோசிக்கிறதில்லைப்போலும்.

## THE GOLDEN NECKLACE.

### A TALE OF MODERN TIMES.

## தங்க அட்டிகை.

### தற்கால கதை.

II.

ஒயிலாம்பாள் இந்தவிசை எச்சம்மாளை "வா" வென்று அழைத்துபசரித்து காரியம் காயா பழமா வென்று விசாரித்தாள். அதற்கு, "நான் காயோடேயா திரும்பி வருவேன், பழம் பழுத்து மடியில் விழுந்து ஏந்திக்கொண்டு வந்திருக்கேன் பார்" என்று மடியைத் தட்டிக் காட்டினாள் எச்சம்.

நாரதாம்பாள் "என்ன செய்தி, என்ன ஆச்சு? எங்கே, பார்ப்போம்" என்று அவள் மடியை ஆராயப்போனாள்.

எச்சம்மாள், "சரடு ஒன்பதரையே அரைக்கால் வராகனிடை யிருந்ததாம். அதில் வீசம் வராகனிடை அரக்கு பொடி ஒட்டிக்கொண்டிருந்ததற்காக தள்ளிவிட்டான். பாக்கியுள்ளது சரியாக நாலேகால் சாவரனாச்சு. இதன் விலை சவரன் பதினைந்தே வீசம் விழுக்காடு 63¾-ரூபாய் 3 - தம்பிடியாகிறது. முக்கால் ரூபாய் 3- தம்பிடி சில்லரை யென்று தள்ளிவிட்டான். பாக்கிரூபாய் 63 இதோ இருக்கிறது. இஷ்டமானால் பணத்தை யெடுத்துக்கொள்; இல்லாவிட்டால் சரட்டை வாங்கிக்கொணர்ந்து தருகிறேன் இப்போ. விலையானால் எனக்குத் தரகு ரூ. 3 நீ தரவேணும்."

ஒயிலாம்பாள் மனமகிழ்ந்து பணம் வந்துவிட்டதேயல்லவோ சரிதான் போம். உமக்குத் தரகு பணம் இப்பவே கொடுக்கவேண்டுமோ? அப்புறம் கொடுக்கலாமோ வென்று விசாரித்தாள்.

"அதற்கென்ன மெள்ளக்கொடேன் உன்னிடத்திலிருந்தால் ஓடியா போகிறது. இன்னம்

பழகப்பழகத் தெரியும் என்னுடையமாதிரி." என்றாள் எச்சம்.

நாரதாம்பாளுக்கு மனம் பொறுக்கவில்லை. அந்தச்சரடு உண்மையில் 40-ரூபாய்க்கு விலைப்போகாது. தரகு 3 ரூபாய் போனாலும் 60 ரூபாய் கலகலவென்று கொட்டியதைப்பார்க்க தன் ராக்கிடியையும் அப்படியே விற்றுக்கொடுக்கவேணுமென்று சொல்லி, அதை யெடுத்துக்கொண்டு வருவதற்காக வீட்டுக்கு ஓடினாள். அவளில்லாத சமயம்பார்த்து எச்சம்மாள், ஒயிலாம்பாள் கிட்டச்சென்று, மிக்க சொந்தம் பாராட்டி இரகசியமாக "ஒயிலம், ஒரு ராயர் வீட்டில் கலியாணம்; சாயங்காலம் போகிறார்கள். உன் காப்புக் கொலுசை ஆறு நாளைக்கு இரவில் கொடுத்தையானால் தேவலை. அவாள் ரொம்பவேண்டியவாள். நகைக்கு நான் உத்திரவாதி, நாள் ஒன்றுக்கு நகையை உபயோகப்படுத்துவதற்காக ரூ. 2½வாடகை வாங்கித்தருகிறேன். அவாளுக்கு வாங்கித்தருகிறேன் என்று சொல்லிவிட்டேன். உனக்குப் பணம்கொடுக்க வேணுமே யென்று வெயிலில் ஓடி வந்தேன். இல்லாவிட்டால் மைலாப்பூர் போய் வாங்கிக்கொடுத்துவிட்டு வருவேன். சாயங்காலமானால் வரமுடியாது, சொல்லிய கெடுதப்பிப்போமே யென்று இந்த ஓடிவந்தேன். இனிமேல் இந்த வெயிலில் மைலாப்பூருக்கு ஓடுகிறதென்றால் அலுப்பாயிருக்கிறது. என் தரகு தொகையை வேண்டுமானாலும் நீ யெடுத்துக்கொள். இந்த ஒத்தாசைமட்டும் நீ செய்யவேண்டும். இது சங்கதி யாருக்கும் தெரியவேண்டாம். நாளைக்குக் கலியாணம். நாளை முதல் 6-நாள்போக ஏழாநாள் மத்தியானம் உன் காப்பு கொலுசும் 15-ரூபாயும் நான் கொண்டுவந்து தருகிறேன். இன்றைக்கு வந்தாப்போல் சரியாக மத்தியானம் 2-மணிக்கு வருவேன். அவள் வருவதற்குமுன் போய் எடுத்துவா, போ, அதெல்லாம் ஒன்றும் யோஜிக்காதே. நான் அப்படி யொன்றும் நாணயப்பிசகாக நடக்கத்தக்கவ்ளல்ல." என்று அவள் மனதிலேறச்சொன்னாள்.

ஒயிலாம்பாள் முதலில் யோசித்தாள்; பிறகு தயங்கினாள். எச்சம்மாள் அவசரப்பட்டு வற்புறுத்தவும், இவ்வளவு உபகாரம் செய்தவளுக்கு இல்லையென்று சொல்ல வாய்வராமல் மனம் இசையாவிட்டாலும் மேலுக்குடன்பட்டு நம்பிக்கை காட்ட வேண்டி நேரிட்டதால் உள்ளிருந்த நகையைக்கொணர்ந்து இரகசியமாக அவளிடம் கொடுத்துவிட்டாள் 'அதை வாங்கிக்கொண்டதும், எச்சம்மாள், அவசரமாக நான் போகவேணும், அவாள் காத்துக்கொண்டிருப்பாள், நாரதாம்பாள் நகை கொண்டுவந்தால் நீ வாங்கி வைத்துக்கொள், நாளைக்கு வந்து வாங்கிப்போகிறேன்' என்று சொல்லிவிட்டு சடுதியிலெழுந்து அதிக அவசரமாக விரைந்தோடிவிட்டாள்.

அவள் போனதும், ஒயிலாம்பாள் மனம் திக்திக் என்று அடித்துக்கொண்டது. கொடுத்த நகையை யெப்படியாவது வாங்கிவிட்டால் நல்லது என்று நினைத்தாள். நினைத்து வாசல்மட்டும் சென்று அவளைக்கூப்பிடவும் பார்த்தாள். ஆனால் கண்ணிலகப்படாமல் போய்விட்டாள்.

இல்லையென்று சொல்லத்தெரியாத குறையினால் அவள் யாரையும் நம்பிக்கொடுக்காத நகையை யவளிடம் கொடுத்தாள். 6-நாளைக்கு 15-ரூபாய் வருமென்ற பேராசையினால் ஒரே நிமிஷம் அவள் மதிமயங்கிப்போனாள். அந்த நிமிஷத்தில் செய்த காரியத்தைமாற்ற அவள் சிந்திப்பட்ட பாடெல்லாம் பயனில்லாமற் போயிற்று.

இவள் இப்படி மனம் தடுமாறிக்கொண்டிருக்கையில் நாரதாம்பாள் ராக்கிடியை யெடுத்துக்கொண்டு பெட்டி, உள்கதவு, வாசற்கதவு எல்லாவற்றையும் ஜாக்கிரதையாகப் பூட்டிக்கொண்டு வந்து சேர்ந்தாள். அவள்முன் தான்

செய்தகாரியத்தினால் தனக்குண்டான தடுமாற்றத்தைத் தெரிவிக்க மனமில்லாதவளாய் தன்னெண்ணங்களை மாற்றிக்கொண்டு எல்லாம் ஈசன்செயலால் நல்லபடியாகவே முடியுமென்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு, அவள் நகையை மறுநாள் வந்து வாங்கிப்போவதாகச் சொன்ன சங்கதியை விவரமாக அவளுக்கு எடுத்துச்சொன்னாள்.

இவர்களிருவருக்கும் அவளிடத்தில் சிறிதும் சந்தேகம் உண்டாகவில்லை. ஒயிலாம்பாள், தன் நகையை விட்டுப்பிரிந்த பிரிவாற்றாமல் தவித்தாளே யன்றி, எச்சம்மாள் மோசம் செய்வாளென்று நினைத்துத் தடுமாறவில்லை. நாரதம்பாளுக்கு, ஒயிலாம்பாளுக்கு நேர்ந்த லாபம் தனக்கு நேரவில்லையே யென்ற பொறாமை தவிர வேறு எண்ணம் ஒன்றும் அச்சமயம் அவள் மனதிலில்லை. ஒருக்கால், ஒயிலாம்பாளுக்குச் செய்த உதவி தனக்குச் செய்ய அவளுக்கு மனமில்லாமலிருக்குமோ வென்று சிறிது சந்தேகப்பட்டிருந்தால் இருக்கலாம்.

மறுநாள் இரண்டு மணியாயிற்று. எச்சம்மாள் மணிதப்பாமல் வந்துசேர்ந்தாள். நாரதாம்பாளுக்கிருந்த சந்தேகமெல்லாம் நீங்கிற்று. அவள்வரவைப்பார்த்ததுமே தன் வீட்டுக்கோடிப்போய் ராக்கிடியை எடுத்து வந்து சீக்கிரமாக அவளிடம் ஒப்புவித்தாள். எச்சம்மாள் அதைப்பெற்றுக்கொண்டு, அந்தப் பொன் நல்லபொன்னாயிருப்பதால் எப்படியும் விற்றுவிடலாமென்றும், ஆனால் அது மிகவும் பழைய மோஸ்தராயிருப்பதால், இப்பொழுது அந்நகை தரிப்பார் அதிகமில்லாதது பற்றி அதைவிற்கக்கொஞ்சம் காலதாமதமாகுமென்றும், அவசரப்படாமல் பொருத்திருந்தால், நல்லபொன்னாயிருப்பதால் பொன் விலையோடு, கூலியிலும்பாதி சேர்த்து வாங்கிதருவதாகச் சொன்னாள். பாதிக்கூலியென்றால் இன்னும் 2½ ரூபாய் கூடக்கிடைப்பதாயிருந்தால் ஒயிலாம்பாளுக்குக் கிடைத்த லாபம் தனக்கில்லாமற் போகக்கூடாதென்று ஒருமாசத்துக்குள் அதை பாதிக்கூலி சேர்த்து இடைக்கிடை சவரன் விலைபோட்டு விற்றுக்கொடுக்கிறதென்று சொல்லிப் பேசி முடித்து அதற்குச் சம்மதித்தாள். எச்சம்மாள் "அனேகமாக 15-நாளுக்குள் விற்றுவிடுவேன், கூலியும் வாங்கவேண்டியிருப்பதால் கொஞ்சம் பேரம் தகரார்வரும், அதற்காக ஒரு மாசத்தவணை கேட்டேன்" என்று சொன்னாள்.

கூலிகேட்காவிட்டால் ஒருவாரத்தில் விற்றுக்கொடுப்பதாக எச்சம்மாள் சொன்னபோதிலும் அதற்குமேல் வரும் 2½-அல்லது 3-ரூபாயைவிட்டுக்கொடுக்க மனமில்லாமல் ஒரு மாதத்தவணைக்கே சம்மதித்தாள் நாரதாம்பாள்.

இரண்டு நாள், மூன்று நாள், நாலுநளாயிற்று; எச்சம்மாள் நடுவில் ஒரேநாள் வந்தாள். முன்போல் நிற்காமல் இரண்டு வார்த்தைசொல்லிவிட்டு அவசரமாகப் போகவேண்டுமென்று போய்விட்டாள்.

ஒயிலாம்பாள் தான் சரடுவித்த சங்கதியைத் தன் புருஷனுடன் சொல்லச் சிலநாள் தாமதித்தாள். அவள் சரடுவித்க சந்தோஷம் காப்புக்கொலுசை விட்டுப்பிரிந்த துக்கத்தில் மூழ்கிவிட்டபடியால் அதை அவள் அவ்வளவாகப் பாராட்டவில்லை. ஆனால் எச்சம்மாள் அப்புறம் முன்போல் வந்துபோய்க்கொண்டிருந்ததில் அவளுக்கு ஒருவிதமனோதிடமும் தான்செய்ததில் பிசகு வராதென்கிற நம்பிக்கையுமுண்டானதால் எப்போதும்போல் மனங்களித்து சந்தோஷமாயிருந்தாள். அப்படி மறுபடியும் சந்தோஷம் வந்தபொழுது தன் சாமார்த்தியமாய்ச் சரடுவித்த தொகையைத் தன் கணவனிடம் காட்டி, அறுபத்திமூன்றும் இருபதும் 83-ரூபாயிருக்கிறதென்றும், சொச்சத்தைப் போட்டு 6-சவரன் வாங்கிக்கொடுத்தால் கூலி வேறு பணத்திலிருந்து கொடுக்கலாமென்றும் புருஷனை வேண்டிக்கொண்டாள்.

சாந்தசர்மா மனைவியிடத்தில் எப்போதும்போல் மிக்க பிரீதியுள்ளவனாய், அவள் அழகில்

முற்றும் அகப்பட்டவனுயிருந்தாலும், அவனுக்குள்ள சாந்த குணத்தால் அவசரபுத்திக்கு மட்டுமவன் ஆளானதில்லை. ஆகவே, முதல் மாசத்து சம்பளமுழுவதையும் நகைக்கென்று எடுத்துவைத்துக்கொண்டு, இன்னம் 7-ரூபாய் கடனும் வாங்கிப்போட்டு சவரன் வாங்க இப்பொழுது என்ன அவசரம்! சற்றுப்பொறேன்: அடுத்தமாசச் சம்பளம் வந்தால் என்ன செய்யலாமென்று பார்ப்போமென்று சாந்தமாகச் சொன்னான்.

தன் வார்த்தைக்குச் சிறிதும் மாருக ஏதாவது தன் கணவன் சொன்னால் அதை யொரு பெரிய குற்றமாகப் பாராட்டி தன்னுடைய தௌர்ப்பாக்கியத்தால் தன்னழகையும் சிறப்பையும் மதிக்க உணராத புருஷனுக்கு வாழ்க்கைப்பட்டு வருந்துவதாக நினைத்து முகத்தைத்தூக்கிக்கொண்டு ஒயிலாம்பாள் அட்டகாசம்செய்ய நினைத்த காலமுண்டு. அப்பேர்ப்பட்ட சமயங்களில் அவள் முகம் கோணவும் சாந்தசர்மா தன் வார்த்தை யேருததையுணர்ந்து அவளிஷ்டப்படி விட்டு நடந்துவந்தானுதலால் அவன்பேரில் குற்றஞ்சொல்ல அவளுக்கு மனம் வாராமற் போயிற்று. வேலை போகும்படியான சங்கடம் நேர்ந்ததை யுணர்ந்தபொழுது எல்லாம் தன்னுலே நேர்ந்ததென்று தன்னைப் பற்றி அவ்வளவு பெருமையாக நினைத்துக்கொள்ளாமல், அவள் புத்தி நிதானத்தோடு நடந்து வந்தபடியால், இப்பொழுது அவள் கணவன் சொன்னது நியாயமாயிருக்கக்கண்டு அப்படியே சரியென்று அவன் சொல்லியதற்குடன்பட்டாள். அதற்குள் தன் காப்புக்கொலுசும் வாடகைப் பணமும் வந்துவிடுமாதலால் தன் கணவனுக்கு எவ்வித கஷ்டமு மில்லாமலே தன்மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்கிற எண்ணமும் அவளுடையகடத்தைக்கு ஒருவிதத்தில் காரணமாயிருந்திருக்கலாம். எப்படியாயினும் புருஷனும் மனைவியும் வெகு சந்தோஷமாக விருந்தார்கள்.

* * *

எச்சம்மாள் குறித்த ஒரு வாரமுமாய்விட்டது. ஏழாம்நாள் குறித்த நேரத்தில் வந்து "கலியாணத்துக்குப்போனவர்கள் இன்றைக்கு வரவேணும்; வரவில்லை; நாளைக்கு வரலாம். வந்ததும் நகையும் பணமுமாக வருகிறேன்" என்று சொல்லிப்போனாள்.

மறுநாள் விடிந்து கழிந்தது. அடுத்த நாளும் அப்படியே சென்றது. மூன்றாம்நாள் எச்சம்மாள் வந்தாள். "கலியாணத்துக்குப் போனவிடத்தில் ஏதோ இழவுநேரிட்டதாம்' இன்னும் 15-நாளில் வருவதாகக் காகிதம் வந்திருக்கிறது. வந்ததும் கட்டாயம் நகையும் பணமுமாகக் கொணர்ந்து கொடுக்கிறேன். நகைக்குப் பாத்தியம் நானிருக்கிறேன் : நீ பயப்படாதே" யென்று தைரியம்சொல்லிப்போனாள்.

ஒயிலாம்பாளுக்கு மனதில் அச்சமுண்டாகத்துவக்கிற்று. உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்திபோல் ஒன்றும் சொல்லக்கூடாமையால் தெய்வத்தின்மேல் பாரத்தைப்போட்டு 15-நாளையும் பல்லைக்கடித்துக்கொண்டு கழிப்போமென்று சும்மா விருந்தாள்.

குறித்த 15-நாளும் ஒயிலாம்பாளுக்கு 15-வருஷங்களாக விருந்தன. 16-ம் நாள் எச்சம்மாள் வருவாளென்று வாசலில்வந்து எதிர்பார்துக்கொண்டிருந்தாள். வரவில்லை. 17-ம் நாள் எச்சம்மாளுக்கு ஆளனுப்பினாள். அவள் அவசரமாக மைலாப்பூருக்குப் போவதாகச் சொல்லி வெளியே போய்விட்டாள். 18-ம் நாள் தானே அவளை நேரப்போய் பார்க்கிறதாகத் தீர்மானித்து நாரதாம்பாளையும் கூட அழைத்துக்கொண்டு சென்றாள். அதற்காகத்தான் நேற்று மையிலாப்பூருக்குப்போயிருந்ததாகவும் சாவி புருஷனிடத்திலிருந்தமையால் அதுவரையிலிருந்து வாங்கிவரத் தனக்குச் சரிப்படவில்லையென்றும் இன்னும் ஒருவாரத்துக்குள் கட்டாயம் வாங்கிவந்து கொடுப்பதாகவும் சொன்னாள், நாரதாம்பா

ளுக்கு குறித்தகெடுமுடிவில் பணம் கொடுப்ப தாகச் சொன்னுள்.

"விற்கவேண்டாம் நகையைக்கொடு" என்று கேட்டாள் நாரதாம்பாள்.

"நகைவிற்று 20-நாளாய்விட்டது. குறித்த கெடுவில் பணம் வருமேயன்றி நகை வராது" என்று சக்கரவட்டமாகப் பதில் சொன்னுள் எச்சம்.

இருவரும் கையைப் பிசைந்துகொண்டு "தெய்வமே! என்னசெய்கிறது', என்று ஏங்கிக்கொண்டு விடுவந்தார்கள்.

ஒயிலாம்பாளுக்குக் குறித்த ஒருவாரமுமாய்விட்டது. நாரதாம்பாளுக்குக்குறித்த ஒரு மாசமும் ஆய்விட்டது.

வெயிலில் நடந்து ஒயிலாம்பாள் உடம்பெல்லாம் கருகிவிட்டது. கால் கொப்பளித்துவிட்டது. கன்னங்கள் ஒட்டிவிட்டன. அவளுக்குச் சாதம் செல்லவில்லே.

புருஷன் "உடம்பு என்ன" வென்று கேட்டான்.

"ஏதோ எனக்கு உடம்பு சரியாகவில்லே" யென்று சொன்னுள்.

"ஏதாகிலும் வியாதி உபத்திரவம் உண்டோ" என்ருன்.

"அப்படி யொன்றும் சொல்வதற்கில்லே" யென்ருள்.

ஆனுல் இளமசக்கை யென்று எண்ணி, "இராத்திரி சமைக்கப்பட்டால் சமை. இல்லாவிட்டால் வேண்டாம்" என்று சொன்னுன்.

இப்படிச்சொன்னதில் அவளுக்கு ஒரு சாதகம் நேர்ந்தது. வெயிலில்வந்து வழக்கப்பட்டவளல்ல வாதலால் எச்சம்மாளேத் தேடி யலேந்துவிட்டு வந்து இராத்திரி சமைப்பது அவளுக்கு மிகக்கஷ்டமாக விருந்தது. இப்பொழுது தள்ளாவிட்டால் இரண்டு நாழிகை இளேப்பாரப் படுத்திருந்து எழுந்திருக்க இடமுண்டாயிற்று.

ஒவ்வொரு நாளேக்குப் பகல் போஜனத்தையே மூடிவைத்திருந்து இராத்திரிக்கும் உபயோகித்துவந்தாள். சாந்தசர்மா எதற்கும் ஏனென்று கேட்கவில்லே. கையில் பணமுள்ளவனுைல் பெண்டாட்டியை சமைக்கவேண்டாமென்று சொல்லி பரிசாரக னேற்படுத்தியிருப்பான். பணமில்லாததோஷம் அவள்போட்டது போதுமென்று பொறுமையாக சாப்பிட்டுவந்தான்.

* * *

ஒரு மாதமாயிற்று. ஆறு வாரமுமாயிற்று. ஒயிலாம்பாள் உடம்பு துரும்பாகப்போயிற்று. சாந்தசர்மா பார்த்து மிக வருத்தப்பட்டான். ஆனுல் அவனுக்குக் காரணம் தெரியாது. தன் மனேவிக்கு மசக்கை யுபத்திரவமென்றே எண்ணியிருந்தான்.

நாரதாம்பாள் புருஷனறிந்து நகை கொடுத்தவளாதலால் ஒருமாத தவணேயானதும் புருஷனே யேவி விட்டாள்.

அவள் புருஷன் அவளுடைய ஹிம்சைக்காக இசைந்தவனுதால் "போ போ அந்தப் பரிசாரக முண்டையைத் தேடிக்கொண்டு யாரலேவார்கள்! நகைபோனுல் தலே முழுகிவிட்டு தீட்டுக்கழிந்த தென்று சும்மாவிரு" என்ருன். இப்படி யொருவாரம் இரண்டுவாரம்கழிந்தது.

* * *

ஒருநாள் மத்தியானம் இரண்டுமணி யிருக்கும். வெளியில் வெய்யில் நெருப்பாக எரிகிறது. வீட்டுக்குள்ளிருப்பவர்களும் உஷ்ணம் தாங்காமல் மூச்சுவிடக் காற்றின்றித் தவித்துக்கொண்டிருக்கிருர்கள். வெயிலின் கொடுமையால் வெளியில் யாருமற்று ஊரரவமடங்கி எங்கும் நிசப்தமாக விருந்தது.

"ஐயோ' அப்பா! இல்லே, சொல்கிறேன்! இல்லே சொல்றேன்!" என்ற சப்தம் ஒருபெண் பிள்ளேயின் அழுகுரலோடு சேர்ந்து ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டது.

சற்றுநேரத்துக்கெல்லாம் வெல்லப்பாகை ஈ மொய்த்ததுபோல் அச்சப்தமுண்டான வீட்டைச்சுற்றிப் பலபட்டடையான ஜனங்

கள் ஏகமாக மொய்த்துக்கொண்டிருக்கக் காணப்பட்டார்கள்.

அன்றுசாயங்காலம் எச்சம்மாள் போலீசாரோடு டாணுவிற்குப் போனதைப் பலர் பார்த்தார்கள்.

மறுநாட் காலையில் சாதாரண உடை தரித்த போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருத்தர் சாந்தசர்மா வீட்டுவாசலில்வந்து அவர்பேரைச்சொல்லிக் கூப்பிட்டு ''குட்மார்னிங் ஸார், உங்களோடு கொஞ்சம் காரியமாகப் பேசவேண்டும், பார்க்கலாமா'' என்று கேட்டார்.

''குட்மார்னிங்', உள்ளே வாருங்களேன்'' என்று அவரை உபசரித்து நேசத்துவமாக வந்ததாக அவரோடு யோகக்ஷேமம் விசாரிக்க, அவர் நான் கொஞ்சம் போலீஸ் காரியமாக வந்திருக்கிறேன்: ஆகையால் உடனே காரியத்தை முடித்துக்கொண்டு போகவேண்டும்'' என்று சொன்னார்.

இந்த வார்த்தை ஒபிலாம்பாள் காதில் படவே அவள் கீழேவிழுந்து மூர்ச்சித்துவிட்டாள்.

அவள் விழுந்த சத்தம்கேட்டு, சாந்தசர்மா வந்து பார்க்க, அவளுடைய நிலைமையைக் கண்டு திகில்பட்டு, அவளை வாரியெடுத்து மடியில்போட்டுக்கொண்டு, தனக்குப் பரிச்சயமானவரான போலீஸ் உத்தியோகஸ்தரைக் கூப்பிட்டு, கொஞ்சம் ஜலம் கொண்டுவரச்சொல்லி மூர்ச்சை தெளியச்செய்தார்.

மூர்ச்சித்துவிழுந்ததின் காரணத்தையுடனே யூகித்துணர்ந்த போலீஸ் உத்தியோகஸ்தர், சங்கதியைச் சுருக்கமாகச்சொல்லி, ''காப்பும் கொலுசும் அகப்பட்டிருக்கிறது, நீங்கள் அவகாசப்பட்டதும் இன்ஸ்பெக்டர்வீட்டுக்கு வாருங்கள், நான் அதற்கு வேண்டிய வழி சொல்கிறேன்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

சாந்தசர்மாவுக்குச் சங்கதி யப்பொழுது தான் தெரியும். ஆனாலும் அந்த சமயத்தில் அவனுக்கு மனைவியின்மேல் சிறிதும்கோபமே தோன்றவில்லை. மூர்ச்சித்துவிழுந்தவள் பிழைத்தாளே அதுவே பெரியகாரியமென்று எண்ணி, அவளைச் சாந்தப்படுத்தி, ''காப்பும் கொலுசும் போனதற்காகவா நீ இவ்வளவு கவலைப்பட்டு உடம்பைத் துரும்பாகவடித்துக்கொண்டாய்! ஐயோ, நான் மசக்கையென்றல்லவோ மோசம் போய்ச் சும்மா இருந்துவிட்டேன்; கிடக்கிறது. காப்பும் கொலுசும் அகப்பட்டிருக்கிறதாம், நான் இன்ஸ்பெக்டரைப் போய்ப் பார்த்து வருகிறேன்'' என்று சொன்னான்.

''என்னைக் கோர்ட்டுக்கிழுப்பார்களோ என்னவோ! என்ன செய்வேன். இதைவிட நாக்கைப் பிடுங்கிக்கொள்ளலாம். எனக்கு நகையே வேண்டாம். இந்தமட்டோடு வெளியிலிழுக்காமல் விட்டுவிட்டால் போதும்'' என்றாள்.

''அதற்குத்தான் ஏதோ வழி சொல்கிறேன் என்று சொல்லிப்போனார்; இன்ஸ்பெக்டரைக்கண்டு பேசிவருகிறேன். பின்பு நடந்ததென்னவென்று தெரியவரும்.'' என்றான் சாந்தசர்மா.

பின்னும் ஒரு மாசத்துக்கெல்லாம் கேஸ் விசாரணைக்கு வந்தது. சாந்தசர்மாவும் இன்னும் சிலரும் வாதிகளாகவந்து ஆஜரானார்கள்.

விசாரணை தினத்தன்று சுமார் 2,000-ரூபாய் பெறும்படியான சொத்துக்கள், நகை நட்டு துணிமணி வகைராக்களாகப் போலீசாரால் மீட்டுவந்து கோர்ட்டில் ஆஜர்ப்படுத்தப்பட்டன.

கைதிகள் நிற்கும் கூண்டில் எச்சம்மாளும் அவளுக்குடந்தையான இன்னொரு விதவையும் நின்றார்கள்.

எச்சம்மாள் சாட்டப்பட்ட குற்றங்களையெல்லாம் ஒப்புக்கொண்டபடியால் வாதிகளையும் இரண்டொரு சாக்ஷிகளையும் விசாரித்துவிட்டு நியாயாதிபதி எச்சம்மாளை இரண்டு வருஷம் கடுங்காவலிருக்கத் தண்டித்துவிட்டு கோர்ட்டு முன்னிருந்த உடைமைகளை உடையவர்களுக்குக் கொடுத்துவிடும்படி உத்தரவு செய்துவிட்டார். எச்சம்மாள், அகப்பட்ட அன்று மத்தியானம் நன்றாக அடிபடுமுன், அவளைக் கோர்ட்டுக்கிழுத்தால், அவளோடு வியாபாரஞ்செய்த ஸ்திரீகளெல்லாரையும் தன்னோடுகூடக்

கோர்ட்டுக்கிழுப்பதாகப் பயமுறுத்தியிருந்ததால், நகை பரிகொடுத்த ஸ்திரீகளெல்லாம் எங்கு நம்மை யிழுக்கப்போகிறாளோ வென்று, நகை போனாலும் போகட்டுமென்று நான் கொடுக்கவில்லை யென்று சொல்லிவிட்டார்கள். புருஷர்களும் அவர்கள் செய்யத்தக்கதொன்று மில்லாமையால், இவர்களுக்கு நன்றாகப் புத்தி வரட்டுமென்று சும்மா விருந்துவிட்டார்கள். அவள் குற்றம்செய்த 300-கேஸ்களில் சார்ஜ் செய்ய எடுத்துக்கொண்டது மூன்று கேஸ் தான். அதற்குமேல் சார்ஜ்செய்ய சட்டம் இடம் கொடுக்கவில்லை. இந்த மூன்று கேஸில் ஒயிலாம்பாள் காப்புக் கொலுசு அகப்பட்டது ஒரு கேஸாதலால் சாந்தசர்மா கட்டாயம் வாதியாகக் கோர்ட்டுக்குப் போகவேண்டி நேரிட்டது. கேஸ், போலீஸ் கேஸானாலும் ஒயிலாம்பாளைக் கோர்ட்டுக்கிழுக்காதபடி பார்த்துக்கொள்ள பெரியதொகை கொடுத்து ஒரு வக்கீலை நியமித்தான்.

அட்டிகைக்காகவைத்திருந்த பணமெல்லாம் இந்தக்கேஸில் செலவழிந்து போய்விட்டது.

காப்பும் கொலுசும் மட்டும் திரும்பிவந்தது.

ஒயிலாம்பாள் அட்டிகைக்கு வைத்திருந்த பணம் போனதைப்பற்றி வருத்தப்படவேயில்லை.

இனி நான் அட்டிகையே அணிவதில்லை யென்று விருதங்கொண்டு உள்ளங்கழுத்து ஒன்றுமில்லாமலிருந்தால் வெறிச்சாப்போலிருப்பதை மறைக்க சட்டைபோல் கழுத்து மூடப்பொத்தான்வைத்துத் தைத்த ரவிக்கை போட்டுக்கொள்ளத் துவக்கி இன்றைக்கும், அப்படியே செய்துவருகிறாள்.

ஒயிலாம்பாளுக்கு இப்பொழுது நகைபாசையே கிடையாது.

அட்டிகையைவிட கழுத்துமூட ரவிக்கை போட்டுக்கொள்கிறது நிரம்ப அழகாயிருக்கிறதென்று அவள்தோழிகளுக்கெல்லாம் அன்று முதல் இன்றைக்கும் அவள் உபதேசம்செய்து வருகிறாள். “கடிகார அட்டிகை” யென்கிற பெயரைச்சொன்னால் இன்றைக்கும் அவள் உடல் நடுங்குவாள்.

நகைமேல் அடங்கா ஆசைகொண்டிருந்த ஒயிலாம்பாள் நகையாசை கூடாதென்பதைப் பற்றி அவள் தோழிகளுக்குபதேசம் செய்வதை நேரக் காதால் கேட்கவேண்டும்!

“நகையாசை” யென்பது சரியான வார்த்தைப் பிரயோகமல்ல, “நகைப்பைத்தியம்” என்று சொல்லவேண்டுமென்பாள். அவள் செய்யும் உபதேசங்களில் அவளுடைய சொந்த அனுபவத்தையே உதாரணமாக எடுத்துச்சொல்வதால், அவள் சொல்வதெல்லாம் அதிக உருக்கமாகவும் மனதிற்பதிவதாகவு மிருக்கிறதென்று அவள் தோழிகள் பலமுறையுஞ் சொல்லக் கேட்டிருக்கிறேன். C. V. S.

[This originally appeared in the "Vivekachintamani" in 1899 and has been copied by unscrupulous publishers. Hence its republication here in its original form—Ed. V. C.]

## "WE ARE SEVEN".

(FROM WORDSWORTH).

## நாங்கள் ஏழுபேர்.

[“ஆன்மாவானது அழிவில்லாது நித்யமாயிருப்பதென்னும் கொள்கை மனிதர்க்கு இயற்கையாக உள்ளதொன்று. அனுபவமும், படிப்பும் இல்லாத ஒரு சிறு பெண்பிள்ளைக்குக்கூட இவ்வெண்ணம் உறுதியாக இருக்குமாயின் மற்றவர்களுக்குக் கேட்பானேன்” என்னும் கருத்தைக்கொண்ட இப்பாட்டு இங்கிலீஷில் வோர்ட்ஸ்வர்த் என்னும் மகாகவி இயற்றியது.]

நேரிசை வெண்பா.

1. மெள்ள வினிதுயிர்த்து வெள்ளையெல்லாம் பாலெனவே
கொள்ளும் குணத்துக் குழந்ததான்,—விள்ளுமுயிர்
மெய்ததும்பக் காணுதலால், வீவெப தொன்றையெவ்வா
றெய்தவுணர் கிற்கு மிசை?

2. கண்டேனோர் ஏழைக் குலத்துவளர் கன்னிதனைக்
கொண்டவயதெட்டென்றாள் கூர்விழியாள் ;—வண்டுசெறி
கூந்தலவள் சென்னிதனைச் சூழ்ந்து குவிந்ததுவால்
தோய்ந்தவிருள் போலச் சுருண்டு.

3. காடகத்தே வாழ்வார்தம் கன்னியெனத் தோற்றினளால்,
கூட்டுமுடை*யும்மதுவே கூறியதால்,—நாட்ட!
இணையினெழில் உள்ளம் கவர்ந்திடலா லென்னே
அணைவில்மகிழ் வுற்றேனு னன்று.

4. "அன்னே, உடன்பிறந்தீர் எத்தனைபேர் ஆவிர்நீர்?
உன்னியுரை," என்னலுமே ஒண்டொடியும்—"துன்னிவரும்
யாங்கள் உடன்பிறந்தேம் ஏழுபேர்," என்றுரைத்துத்
தேங்கியென்னைப் பார்த்தாள் திகைத்து.

5. "மற்றவர்தாம் எங்குள்ளார்? மாதேநீ கூறுவையோ
உற்றெனக்கிங்" கென்றுயா னோதுதலும்,—சொற்றனள்காண்
"ஏழுபேர் தம்மில் இருந்தார் இருவர்தாம்
வாழும் கான்வைப் பதியில் மற்று.

6. "பின்னு மிரண்டுபேர் பேராழி யோடுவர்காண்;
இன்னமொரு சோதரனும் சோதரியும்,—மன்னிவளர்
ஆலயத்தின் சூழல்வா யாங்கு துயின்றிடுவார்,
சாலவினி தாகத் தனி.

7. "அன்னதொரு சூழற் கடுத்த குடிற்கண்ணே
துன்னிடுவேன் யானும் சுகமாக,—அன்னையவள்
தன்னோடு மன்னூர் சமீபம்" எனச் சாற்றினாள்
மின்னுடும் நங்கை விரைந்து.

8. "இருவர் திருப்பதியின் எய்ந்திருப்பின், இன்னம்
இருவர் கடன்மிசையே யேகின்,—தெரிவையே
நீவிர்தா மெவ்வா றெழுவீர் நிகழ்த்து"கெனப்,
பாவையவள் சொல்வாள் பரிந்து:

9. "ஓகோ! மரத்தடியில் உற்றதொரு கோயிற்கண்
வாகா உறங்குநரை யேன்மறந்தீர்?—ஆகக்
கணக்காக ஏழுபேர் காண்பீர்யாம் ஆண்பெண்;
பிணக்கில்லை யென்றாள்" பெயர்த்து.

10. பெண்ணேநீ யோடிப் பெயர்ந்திடுவாய், பேருயிரால்
எண்ணுமுறுப் பெல்லாம் இலங்கிடுமால்;—மண்ணிற்
புதைத்துண் டிருந்தாரைப் பூமுகத்தாய் நின்னோ
டெதுகொண் டியம்பிடலா மிங்கு?"

11. "என்னேநீ ரிவ்வா றிசைப்பீர்? அவர்நயந்து
துன்னும் சமாதிதான் தோன்றுதோ?—வன்னம்
பசுமைவாய்ந் தெம்மிலத்திற் பத்தடிக்கே யப்பால்,
இசையுமவை பாங்காக இன்று.

12. "பல்காலும் ஆங்கே தரையிற் பரிந்திருந்தே
ஒல்காது தையல் உருற்றிடுவேன்,—சில்காலை,
உண்மகிழ்ச்சி கொள்வேன்நான் உற்றவர்கள் கேட்டுவக்கப்
பண்விளங்கப் பாடிப் பரிந்து.

13. "அத்தமித்த பின்னே, அரிய நிலாவொளிதான்
முத்திழைத்த தென்ன முதிர்பொழுதில்,—எத்தனைகால்,

* கூட்டும்+உடையும் என்று பிரியும்.

சொன்றிக் கல்த்தோடும் துன்னியிருந் துண்டதுதான் ?
இன்றைக்குப் பொய்யோ விது ?

14. "என்னன்பாள் முன்ன மிறந்தாள், கிடந்தகிடை
ஆனவவள் பட்டதுயர் ஆர்காண்பார் ?—தானதனின்
நீங்கிடவு மீசன், நெடுந்துயரெல் லாமிங்கு
போக்கியவள் போஞள் புரிந்து.

15. "ஆதலினல் அன்னளை ஆலயத்தின் சூழலிலே,
ஏதமற வைத்தார் இடம்கண்டு ;—காதலொடும்,
ஆடினேம் யோகானும் யானுமாய் அவ்விடத்தே
நாடியுறு வேனிலெலாம் நன்கு.

16. "பின்னே பனியின் பெயலால் விளர்த்திருக்கும்
அந்நாளில், யானுடி ஓடிடவும்—,என்னைவிட்டுப்
போகவசப் பட்டுப்போய்ப் போனவவள் பாற்றுயின்ருள்
யோகனுன் தானுமங் குற்று.'

17. "ஆகவே, அவ்விருவர் வான்சென்ற மர்வாரேல்,
தோகையே, எத்தனைபேர் நீர்சொல்லாய்"—வாகா
இசைத்திட்டாள் பின்னும் "யாம் ஏழுபேர்" என்றே !
அசைக்கிற்பார் யாரவளை யாங்கு ?

18. "ஆமேகாண் அன்னர் இறந்திட்டார், வான்சென்று
தாமே யிருந்திடுவார், சாற்றுவதேன் ?—போமையா
வீணேகாண் வாதித்தல் வேறில்லை ஏழ்பெயர்யாம்
காணிர்நீர்" என்ருள் கனிந்து.

---

## VAIN IMAGINATION.

### வீண்மனோராச்சியம் அல்லது தபசியும் தேன் சட்டியும்.

ஓராநொரு காலத்திலே மேற்குமலைத்தொடரின் (The Western Ghats) ஒரு புறமாய் வழிந்தோடும் ஒரு நதிக்கரையின்மேல் ஓர் தபசி தனக்கு ஒரு பர்னசாலை கட்டிக்கொண்டு வசித்துவந்தார். அவர் இவ்வுலக வின்பங்களெல்லாம் அநித்தியமானவை யெனத்துறந்து சதா ஸர்வேசுவரனைத் தியானம் செய்வதில் தம் காலத்தைச் செலுத்திவந்தார். அவர் உறக்கங்கொள்வது வெகு அபூர்வம். நாள் முழுவதும் அழுதகண்ணுஞ் சிந்திய மூக்குமாய் எப்போது நமக்கு ஸர்வேசன் தரிசனமளிப்பார் என அவரைத் தியானித்துக்கொண்டே யிருப்பார். பகலவன் தனது கடமையைச்செலுத்திவிட்டு தனது ரதத்துடனும் மேற்கடலையடையும் சமயத்தில் இவர் மேற்சொன்ன சிற்றருவியின் கரையோரமாக இளந்தென்றற்காற்றை உட்கொள்ளும்பொருட்டு உலாவுவார். இவரது ஆகாரம் வாயுவே.

இவர் வசித்துவந்த இடத்தின் ஓரமாக ஓடிய நதியானது கொஞ்சதூரம் சென்ற பின் சமவெளியில் பிரவேசிக்கின்றது. அந்த சமவெளியினின்று கொஞ்சதூரம் சென்ருல் ஒரு பெரிய பட்டணத்தைக்காணலாம். அப்பட்டணத்தில் ஒரு பெரியவர்த்தகனிருந்தான். அந்தப் பிராந்தியத்திலுள்ளவர்கள் எல்லாரிலும் அவன் அதிக செல்வவான். இவனது புலங்களில் மல்லிகை, முல்லை, இருவாட்சி, கதலி, பலா, மா முதலிய புட்பச்செடிகளும் பழவிருக்ஷங்களும் ஏராளமாய் பயிராக்கப்பட்டு வந்தன. இம்மரங்களில் நாணித்தலைகுனிந்து புஷ்பித்திருக்கும் பூக்களிலுள்ள மதுவைக்குடிக்க தேனீக்கள் மொய்த்துக்கொண்டிருக்கும். இவன் தோட்டங்களிலுள்ள மரங்களில் தேனீக்கள் அநேகம் கூடுகள்கட்டி அவற்றை வெகு ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்துவந்தன.

ஒருநாள் இந்தவியாபாரி பொழுதுபோக்காக தன் அருமை மைந்தனுடன் மேற்சொன்ன நதியின் எதிர்முகநோக்கிப் போய்க்கொண்

டிருந்தான். கொஞ்சதூரம் சென்றபின் "நாராயண நாராண" என்றசப்தம் இவர்கள் காதில் விழுந்தது. உடனே "இங்கே இந்த சப்தம் வருவானேன்? இங்கே யாரோ ஒருமஹான் இருத்தல்வேண்டும்" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு தன் குழந்தையுடன் சப்தம் வந்த திசையைநோக்கிச் சென்றான். அங்கே போகையில் "இட்றிவிழுந்தால் பிராணன்போகக்கூடிய" ஸ்திதியிலிருந்த ஒரு தபசியைக்கண்டான். சந்தியாகாலம் கிட்டிவிட்டபடியால் தபசி தமது நிஷ்டையிலிருந்து எழுந்து வெளியே சஞ்சாரம்செய்ய வழக்கப்படி புறப்பட்டார். வர்த்தகனும் அவனது மகனும் இவரிடத்திற்குக் கடுகிச்சென்று சாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டார்கள். தபசியும் "நீங்கள் சகலசம்பத்துமுள்ளவர்களாய் நெடுங்காலம் வாழக்கடவீர்கள்" என்று ஆசிர்வதித்தார்.

பின்னர் வியாபாரி "இவரோ மிகவும் மெலிந்திருக்கிறார். தனது பசியை யாற்றிக்கொள்ள இவருக்குஒன்றுங்கிடையாது. நம்மிடத்திலோ தேன் வராளமாயிருக்கிறது. தினமும்இவருக்கு சிறிதளவு கொடுத்தால் நமக்குக்குறைந்துபோவதொன்றுமில்லை" என்று தனக்குள் யோசனை செய்துக்கொண்டு தபசியை நோக்கி "தேவரீர் மிகவும் மெலிந்து எலும்புந் தோலுமாயிருக்கிறீர்கள். தேவரீருக்கு சம்மதமானால் அடியேன் தினந்தினம் கொஞ்சந் தேன் அனுப்பிவைப்பேன்" என மொழிந்தான். வியாபாரியின் மகன் :—"நானே கொண்டுவந்து இவருக்குத் தினமும் கொடுக்கிறேன் அப்பா" என்றான்.

தபசி.—"ஏதப்பா! குழந்தாய்! நீ உன் தகப்பனைவிட அதிக உதாரகுணமுள்ளவனாயிருக்கிறாய் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன்" என்றார்.

வியாபாரி.—"சர்வவல்லவரான கடவுள் நமக்கு தேகதிடனும் மிகுந்த சம்பத்தும் என்னத்துக்காகக் கொடுத்தார்? அதிதிகளுக்கும் இரப்போருக்கும் கொடுத்துதவவே: அதிலும் ஒருவர் நிலைமையையறிந்து அவர் "எனக்குத்தா" என்று கேட்பதற்குமுன் கொடுப்பது அதி விசேஷமானது. இதுபற்றியல்லவா சகலமுமறிந்த குமரகுரு ஸ்வாமிகளுங்கூட

"கல்வியுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற்றாமுந்
தலைவணங்கித்தாழப்பெறின்"

என்று கூறியிருக்கிறார்.

தபசி.—"நாம் ஒருவரைப்போய் எனக்கில்லை கொஞ்சங்கொடு என்று கேட்பதுமில்லை. ஒருவருடையதை பலாத்காரமாய்ப் பிடுங்குவதுமில்லை. ஒருவர் வலியக் கொணர்ந்துகொடுத்தால் வேண்டாமென்று தள்ளிவிடுவதுவுமில்லை. "ஈவது விலக்கேல்" என்பது நமது மூதாட்டியால் உரைக்கப்பட்ட கட்டுரையல்லவா? ஆகையால் நீர் உமதிஷ்டப்படி செய்யலாம்" என்றுரைக்க,

வியாபாரியும் அவனது மகனும் செலவு பெற்றுக்கொண்டுதங்கள் ஊர்வந்து சேர்ந்தார்கள்.

தான் வாக்களித்தபடியே வியாபாரியானவன் தினமும் ஒரு சட்டி நிறைய தேனைப் பெய்து தன் புதல்வனிடம் கொடுத்து தபசியிடம் சேர்க்கும்படி கட்டளையிடுவான். தபசியானவர் வியாபாரியின் மகனையும் வியாபாரியையும் வாழ்த்தி அனேக வந்தனங்களோடும் அந்த சட்டி தேனை வாங்கிக்கொள்வார்.

அந்தத்தேனில் ஒரு சிறுபகுதியைக் குடித்துவிட்டு மிகுந்ததை ஒரு சொட்டுக்கூட சேதப்படுத்தாமல் ஒரு பெரிய பானையில் ஊற்றிவைப்பார். இவர் இருந்தவிடத்தில் ரகசியமாக குகை ஒன்றுண்டு. அந்த குகையின் ஒரு மூலையில் ஒரு உரியைக்கட்டி அந்த உரியில் இந்தப்பானையை வைத்துவிடுவார். இப்படிக் கொஞ்சக்காலம் கழிந்தது. கிருபணத்துவம் நாளுக்குநாள் அதிகரித்துவிட்டது. போலித்தபசியாய்விட்டார். வாய்விட்டு நாராயணனைக் கூப்பிடுவார். ஞாபகம்மாத்திரம் பானையின்மேலிருக்கும். எப்போதாவது உலர்ந்த சருகுகள் காற்றினால் அடிபடும்போது உண்டாகும் சத்தம் காதிற்கெட்டிவிட்டால் உடனே குகைக்குட்சென்று பானை சரியாயிருக்கிறதா என்று பார்ப்பார்.

ஒருநாள் அவர் தம் வாழ்க்கையைக் கேவலமாக மதித்து "இன்று ஒரு நாள் தபசுசெய்யாவிடில் என்ன கஷ்டம் வந்துவிடும்? இன்றைக்கு தபசில் உட்காருவதில்லை" எனத் தனக்குள் தீர்மானித்துக்கொண்டு தனது ரகசியமான குகையில்போய் சட்டியை வைத்திருந்த மூலையில் உட்கார்ந்துகொண்டார். அங்கே ஒரு நாளாகிலும் சூரியன் பிரவேசித்தறியான் ஆதலால் அது மிகக் குளிர்ந்திருந்தது. அங்கிருந்துகொண்டு பின்வருமாறு ஆலோசிக்கத் தொடங்கினார் :—

"என்னுடைய கஷ்டகாலம் சீக்கிரம் தீர்ந்துபோம். இவ்வளவு நாள் மழைக்கு நனைந்து வெயிலுக்குலர்ந்து கிடந்தேனாலும் இனிமேல் எனக்கு நற்காலம் பிறந்துவிடும். கஷ்டமனுபவித்தபின்பு சுகமனுபவித்தல்தான் நல்லது. அப்படி அனுபவிக்கும் சுகம்தான் உண்மையான சுகம் இப்போது. பானை நிரம்பியிருக்கிறது. சிறுவிலைக்காலம் வந்தவிடத்து தேனை விலைப்படுத்துவேன். என்னிடமிருக்கும் தேன் குறைந்தது 10-பணத்துக்குப்போகும் (10-பணம் $2\frac{1}{2}$ - ரூபா) 10-பணம் ஒன்றல்ல இரண்டல்ல. 10-பணம் பத்தெண்ணுவதற்கே 10-நொடி செல்கின்றது. அதைக்கொண்டு ஒரிடையனிடத்தில் 5-ஆட்டுக்குட்டிகள் வாங்குவேன். அவை வருடத்திற்கிருமுறை சூலாகி தலைக்கு 2-வீதம் குட்டிபோடும். "சிறுகத்தொடங்கினல் பெருக வாழலாம்" என்று பெரியோர் புகன்றது பொய்க்குமா? ஒரு வருஷத்தில் 20-குட்டிகளாகிவிடும். 10-வருஷத்தில் அவைகள் எவ்வளவு என்று எண்ணுவது என்னாலாகாது. என்னண்டை ஆடுகளிருக்கும் சங்கதி கம்பளம் செய்கிறவர்கள்கண்டால் எல்லாரும் ஆட்டு மயிருக்காக என்னிடமே குத்தகைகொள்வார்கள். கொஞ்சக்காலத்துக்குள் பெரியதனவானகிவிடுவேன். எனக்கீடான பணக்காரன் இந்தப்பிராந்தியத்திலேயே ஒருவனுமிருக்கமாட்டான். பின்பு உயர்குலஸ்திரீ ஒருத்தியை மணம் புரிவேன். ஒருவேளை ராஜகன்னிகையே எனக்கு மனையாளாக வந்தாலும் வரும். அப்புறம் ஆகாயத்தை யளாவும்படியானதும் மிக விஸ்தாரமுள்ளதும் சகல சம்பத்துகளும் நிறையப்பெற்றதுமான ஓர் உன்னதமாளிகை கட்டுவேன். வீட்டின் அடித்தரையை தங்கத்தினல் முலாம் பூசுவிப்பேன். கூரையை நவரத்தினத்தால் அமைப்பேன். எனது மாளிகையை மின்னலுக்தோற்றுப்போம்படி வெளிச்சமுள்ள விளக்குகளால் பிரகாசிக்கச்செய்வேன். அதனல் இரவும் பகல்போலத்தோற்றும். வீட்டைச்சுற்றியும் ஒரு சிங்காரவனம் நிருமிப்பேன். அதில் விதம்விதமான புஷ்பச்செடிகளைப் பயிராக்குவேன். அவைகளுக்குத் தண்ணீருக்காக ஒரு நதியை தோட்டத்திற்குள் திருப்பிவிடுவேன். எப்போதுபார்த்தாலும் 'கம்' மென்று வாசனை வீசும்; என் மாளிகைக்கு ஈடாக இந்த ஜம்புத்வீபத்திலேயே எங்கும் காணக்கிடைக்காது. எனக்குக் கலியாணமான பின் என் மனைவியை மாளிகைக்குக் கூட்டிவருவேன். கொஞ்சக்காலத்துக்கெல்லாம் எனக்கு ஒரு ஆண் பிள்ளை பிறக்கும். அவன் அதிசௌந்தரியமுள்ளவனாயிருப்பான். அவனை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவருவேன். அவனுக்கு வயது நாலானவுடனே வேதவிதிப்படி அவனுக்கு வித்தியாப்பியாசம் செய்விப்பேன். சகல வேதங்களையும் ஐயமறக்கற்பான். உலகத்திலுள்ள சகலபாஷைகளையும் கிரந்தங்களையும் வெகு சீக்கிரத்தில் கற்று வல்லவனாகிவிடுவான். இவ்வளவெல்லாஞ் செய்தபின் "பிள்ளைதான் வயதின் மூத்தாற் பிதாவின் சொற்புத்திகேளான்" என்பதற்கிணங்க என் புத்தியைக் கேளாமல் முடக்கடிசெய்வானானல் அவனை அதி கொடூரமான தண்டனைக்குள்ளாக்குவேன். அவனுக்குப் பின்னும் புத்தி வராவிட்டால் "இந்த தண்டத்தைக்கொண்டு பலமாக ஒரு அடி அடிப்பேன்" என்று தன்னண்டை கிடந்த ஒரு தண்டத்தை எடுத்துச்சுழற்ற பானையை அது பலமாய்த்தாக்கிச் சுக்கல் சுக்கலாக்கிவிட்டது. சட்டி உடைந்ததும் தேன் தபசியின் தலைமேல் வருஷித்தது. உடனே தபசி எழுந்து "இந்த மட்டோடாவது தப்பித்தேனே. இதில் ஏதாவது ஈக்கள் இருந்திருந்தால் அவைகள் என்னைக் கொடிய கஷ்டத்துக்குள்ளாக்கிவிடுமே! என் செய்வேன்! தெய்வமே என்கையிலில்லாத காரியங்களைப்பற்றி மனோராச்சியம் செய்ததின் பலனை இதோ அனுபவிக்கிறேன். நான் தெய்வத்தை தொழுதுகொண்டிருக்கவேண்டிய காலத்தை வீண்எண்ணங்கள் கைக்கொண்டன. இதன்பலன் உடனேகைமேல் கிடைத்துவிட்டது.

"தெய்வமுளதென்பார் தீயசெயப்புகின்
தெய்வமே கண்ணின்று வின்றுறுக்கும்"

என்று பெரியோர் புகன்றது பொய்யோ! இனிமேல் நான் தேனைவாங்கி உண்பதில்லை. இவ்வளவு ஆனதுபோதும்!" என்று நினைத்துக்கொண்டு நேராக நதிக்குச்சென்று கருக்காய் வேஷ்டியைத் துவைத்துக்கொண்டு தன் தேகத்தையும் நன்றாய்த்தேய்த்து முழுகி தன் இருப்பிடம் வந்துசேர்ந்தார். மறுபடியும் தனது காமம்செய்ததை நினைந்து தேறி கடவுளை தியானிப்பதில் தன் காலத்தைச் செலுத்திவந்தார்.